உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவாலய மான்மியக் கோவை.



கொங்கணபூர்

மகாவித்வான் சிவக்கொழுந்துதேசிகரவர்கள்

தௌகித்திரர்

அரித்துவாரமங்கலம்

ப. சோமசுந்தர தேசிகரால்

இயற்றப்பட்டது.

தஞ்சைமாநகரம்

"தேசாபிமானி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1890ஆ நவம்பர்மீ

## முகவுரை.



ஸ்ரீ-அகண்ட பரிபூரண சச்சிதா நந்த சொரூபி யாகிய சிவபெருமான் திருவுருக்கொண்டெழுந்தருளி யிராநின்ற மூவர்கள் பதிகம் பெற்ற சிவக்ஷேத்திரங் கள் இருநூற்றெழுபத்துநான்கு இந்த இருநூற்றெழு பத்துநான்கு க்ஷேத்திரங்களுக்கும் ஒவ்வொரு ஸ்தல ப்பெயர் ஷை ஸ்தலத்தின் மான்மியம் சுவாமியின் பெயர் அம்பாளின் பெயர் வேண்டுகோள் இவைகளை ச்சேர்த்து மேற்குறித்த ஒவ்வாரு ஸ்தலங்களுக்கும் ஒவ்வொரு செய்யுள் மூலமாய் 274 செய்யுள்கள் செய்து அச்சிடப்பட்டன.

## விளம்பரம்.



இப்புத்தகம் வேண்டுவோர்கள் கும்பகோணம் தாலூகா அரித்துவாரமங்கலம் சோமசுந்தர தேசிக ரிடத்தில் விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்.

இதன் விலை அணா ௨. தபாற்கூலி பைசா ௨.

ஒரே தடவையில் 10 புத்தகம் வாங்குபவர்களு க்கு 1 புத்தம் கம்மிஷன் கொடுக்கப்படும்.

சிறப்புப்பாயிரம்.

## சாற்றுக்கவிகள்.

தஞ்சைமாநகரம். சதாவதானம்.

மகா-ா-ா-ஸ்ரீ சுப்பிரமணிய அய்யரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

மயிலையிலோர் மயிலையென்பிற் றந்தாருங் கன்மிதக்கும் வசனத்தாரும், துயிலையுறு முதலையின்வாய் மதலையினைத் தந் தாருஞ் சொற்றூர் வேய்ந்த, கயிலைமுதற் றலமிலகச் சிவாலய மான்மியக்கோவை கவினத்தந்தான், அயிலையொரு கயிலு டையாற் பணி சோமசுந்தரப்பேரமர் தூயோனே.

திரிசிரபுரம்.

மகாவித்வான்.

மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை யவர்கள்

மாணாக்கருளொருவரும்

தஞ்சை, மிஷியோன்.

எஸ். பி. ஜி. காலேஜ்

தமிழ்த் தலைமைப்புலவருமாகிய

சாற்றுக்கவிகள்.

மகா-ள-ள-ஸ்ரீ மு. ஐயாச்சுவாமிபிள்ளை

யவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

பொற்புலவுஞ் சீர்காழிச் சம்பந்தர் முதலா முப்புல
வரன்பாற், சொற்பதிகம் புனைந்த பல தலப்பெயரு
மான்மியமுஞ் சுவாமியம்மை, நற்பெரும் விளங்கு சிவா
லய மான்மியக்கோவை நவின்றுன் மேலாங், கற்புலவும்
பழனியப்பனருட் சோமசுந்தரப்பேர் கலை வல்லோனே.

திருவையாறு சிவாநந்த சுவாமிகள் மாணாக்கர்

தஞ்சைமாநகரம்

மகா-ள-ஸ்ரீ ந. வீரபத்திரபிள்ளையவர்களியற்றிய

கூ. எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய

விருத்தம்.

பூமேவு தொண்டரறு பத்து மூன்று புண்ணியரு ளப்பர்
முதன் மூவர் போற்றுந், தேமேவு தலங்களெலாம் விளங்கு
மாறு சிவாலயமான் மியக்கோவை செய்தா னன்பால்,
மாமேவு மெழில்வளஞ்சே ரரித்து வாரமங்கலம்வாழ் பழனி
யப்ப வள்ள லீன்ற, தூமேவு முத்தமிழ்தேர் சுகுணன் சோம
சுந்தரதே சிகன்றகைசால் தூயோன்மன்னே.

## சாற்றுக்கவிகள்.

### மன்னார்குடி மகாவித்துவான்
### மகா-ள-ள-ஸ்ரீ இரங்கசாமி செட்டியா
### ரவர்களியற்றிய அறுசீர்க்கழி நெடிலடி
### யாசிரிய விருத்தம்.

தேவர்களு முணரவொணுச் சிவசமய மேன்மேலுஞ் சிறப்புற்றோங்க, மூவர்கள் சொல் பாடல்பெறு சிவாலயமான் மியக்கோவை மொழிந்தான் முன்னோன், சேவடியர்ச் சனைசெய்யுந் தேசிகனுய்ச் சிவஞானந் தெருட்டலாலே, நாவலர்கள் புகழ்சோம சுந்தரதே சிகனெனப்பேர் நலங்கொண்டானே.

### மன்னார்குடி டவுண் ஐஸ்கூல்.
### தமிழப்பண்டிதர், மகா-ள-ள-ஸ்ரீ நாராயணசாமி
### பிள்ளை யவர்களியற்றிய அறுசீர்க்கழி
### நெடிலடி யாசிரியவிருத்தம்.

பண்களிக்கு மறைமுடிவாழ் பரம்பொருளா மரன் கமலப் பாதம் பற்றும், எண்களிக்குந் திருவுளத்தா னியற்சோம சுந்தரன்ரு னினிது சொற்ற, மண்களிக்கும் புகழ்வாய்ந்த சிவாலயமான் மியக்கோவை மகிழ்ந்து பார்க்கிற், கண்களிக்கு முறக்கேட்கிற் செவிகளிக்கு மனங்களிக்குங் கருதிற்றுனே.

### திரிசிரபுரம் மகாவித்வான்
### மகா-ள-ளஸ்ரீ மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்
### மாணுக்கருளொருவரும் திருவனந்தபுரம். சர்வகலாசாலைத்
### தமிழ்த்தலைமைப்புலவருமாயிருந்த கொட்டையூர் மகா-ள-ஸ்ரீ
### சி. சாமிநாத தேசிகரவர்கள் இயற்றிய

சாற்றுக்கவிகள்.

நேரிசையாசிரியப்பா.

மைக்கடல் வயிற்றிடு மைத்திராவருணி
கையயிற் றந்த மொய்திரை நதியின்
வடகரை தென்கரை வளர்பொரு ளீழம்
பாண்டிமாமலை பார்புகழ் கொங்கு
நடுநாடுடனே தொண்டைநன் னாட்டும்
துளுவநாட்டுஞ் சொல்வடநாட்டும்
மூவர்பதிக மொழிந்த பஃறலம்
மரீஇச் சிவாலய மான்மியக்கோவை
யென்னுநாமத் தியற்றின னொருநூல்
வெண்கடற் கருவிடஞ் செம்மிடற்றடக்கித்
தங்கணாயக ரின்னுயிர் தந்துதம்
மங்கலங் காத்த மாட்சிய னின்னும்
இடர்வரிற் போக்கு மரனெனுமுண்மை
தெரிந்தர மகளிர் துணைவர் சேர்தர
வந்துவசிக்குந் தன்மையின் வண்மைய
மாதர்தந் தவரொடு மருவிவாழ்வுறுங்
குலாசலநதிரிந்தன கொடிமணிமாளிகை
புக்கிலரங்கம் பொருவில் கல்லூரி
சித்திரகூடஞ் சிறப்புறுமன்றம்
மாகாலுலவு மேகார்தஞ் சூழ்
அரித்துவார மங்கலத் தன்பொடு
கல்விவாய்மை கணிப்பினிறைந்த
பழனியப்பப் பண்பினன்றவமே
ஒருருக் கொண்டதை யொப்பத் தோன்றி
இலக்கண் விலக்கிய மிணையிலாகமம்
ஒருங்கே யாய்ந்து பெரும்புகழ் வாய்ந்த
சோமசுந்தர தேசிகன்
எனப்பெயர் புனைந்த கவிஞ ரேறே.

உ

சிவமயம்

# சிவாலயமான்மியக்கோவை.

## விநாயகர்துதி.

நீர்கொண்ட பங்கயன்மால் முதலோரைத் தந்தவர்க ணேயத் தாற்ற, ஏர்கொண்ட தொழிலருள்வா னுல்வாயின் புழையின்வழி யெடுத்துட் கொண்டு, பேர்கொண்ட வவை யுணர்த்திப் பிரமனையவ் வழியளித்துப் பிறலாக்காதின், சீர் கொண்ட வழியளித்த யானைமுக னிருபாதஞ் சிரமேற் கொள்வாம்.

## பலதேவர்துதி.

ஒருசிவ பெருமா னுமையவள் குமர னுளமகிழ் வள்ளி தெய்வானை, அருநடம் புரிவோ னருட்சிவ காமி யருங்குரு நந்திமா வடுகன், இருவன சத்தா ளெழிற்குரு முனியெண் டிசைதொழு நால்வர் தண்டீசர், திருவடிக் கமல மலர்தனை யுவந்து சிரந்தனி லணிந்துவாழ்ந் திடுவோம்.

திருக்கலிக்காமூராகிய அன்னப்பன்பேட்டை.

அய்யனே பராசர் தொழுங்கலிக் காமூ ரன்பனே சுந்தரே ச்சுரனே, துய்யனே யழகு வனமுலை யம்மை துணைவனு யமர்பர சிவனே, வெய்யவென் பவத்தின் வேரறுத் தாள்வாய் வேதமே வேதத்தின் முடிவே, செய்யவொண் கதிரின் செங்கணு வெங்கள் செல்வமே கருணைவா ரிதியே. (8)

(திருச்சாய்க்காடு) சாயாவனம்.

பட்டமா மாமுந் தளிர்த்திடப் பாடிப் பணியுப மன்னியரேத்தும், நட்டமில் சாய்க்காட் டத்தனே முத்தா நற்குயின் மொழியம்மை நாதா, மட்டவிழ் கொன்றைச் செஞ்சடைமுடியா மன்னிய மறைமுதற் பொருளே, சிட்டனேன் சாயாவனேசனே யாள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (9)

திருப்பல்லவனீச்சரம் காவிரிப்பூம்பட்டினம்.

பல்லவ னெனும்வேந் தன்றொழும் பரனே பல்லவ னீச்சுர மதனிற், கொல்லுலை வேற்கட் சௌந்தரநா யகிபாற் குலவிவாழ் பல்லவ னேசா, கல்லெனு மனத்துக் கசடனேனெனினுங் கழற்றுணை யருளலுன் கடனே, செல்லரிக் கிணைக்கல் வில்லமர் கரனே செல்வமே கருணைவா ரிதியே. (10)

திருவெண்காடு.

தொய்யின்வெம் முலையார் மையலிற் சிக்கிச் சூழ்நர கினுக்கிலக் காகிப், பொய்யனேன் வருந்த றக்கதோ வருள்வாய் பூம்பொழில் சூழும்வெண் காட்டு, மெய்யனே சுவேதா ரண்ணியேச் சரனே மிளிர்கவின் பெரியநா யகிசேர், செய்யனே வெள்ளை யானைபூ சித்த செல்வமேகருணைவா ரிதியே. (11)

### கீழத்திருக்காட்டுப்பள்ளி.

அலங்கலை யணியா ரணிய சுந்தரனே யழககி லாண்டநா
யகிசேர், நிலந்திருக் காட்டுப் பள்ளியில் வாழும் நித்தனே
முத்தனே நிமலா, நலம்பெறு மமரர் பூசனை புரிந்த நாயகா
வெனக்குநீ யருள்வாய், சிலம்பணிந் தவனே சங்கரா சம்போ
செல்வமே கருணைவா ரிதியே. (12)

### திருக்குருகாவூர்.

நச்சணிகளத்தாய் நாவலூ ரார்க்கு நல்லகட் டமுதினை யளி
த்தே, இச்சையி னமருந் திருக்குரு காவூ ரேந்தலே யெனக்
குநீ யருள்வாய், கச்சணி தனத்துக் காவியங் கண்ணி காந்த
னோ வெள்ளடை நாதா, செச்சைவேய் தோளா சங்கரா
சிவனே செல்வமே கருணைவா ரிதியே. (13)

### திருத்தோணிபுரம்.

அளிகளித் தருந்து நறுந்துழாய் மார்ப னயன்முத லாயி
னோர்க் கிரங்கி, ஒளிர்பெருந் தோணி யூழிகா லத்தி லுவந்து
விட் டிடுபெரும் பரனே, நளிமிகு காழித் திருநிலை யுமையா
ளன்பனே தோணியப்பா நற், றெளிபுனற் சடையாய் பவக்
கடல் கடத்து செல்வமே கருணை வாரிதியே (14)

### திருக்கோலக்கா.

பாலறு வாயாற் குயர்ந்தபொற் றாளம் பரிந்தருள் பரம
னே யமுதே, வேல்விழி யோசை கொடுத்தநா யகியை விரு
ம்பிவாழ் சப்தபு ரீசா, கால்வலிநோவக் கசடரையடைந்தென்
கவலையை மொழிந்திடா தருள்வாய், சேல்வளர் கழனி சூழ்
ந்த கோலக்காச் செல்வமே கருணைவா ரிதியே. (15)

திருப்புள்ளிருக்குவேளூர்.

மருவுபுள் ளிருக்குங் கந்தனுங் கதிரு மன்னிய பூசனை யியற்றி, இருநல மடைய வருள்புரிந் தவனே யிசைப்பதற் கரியவே ளூர்வாழ், பெருமணிச் சுடரோ தையலை மணந்த பித்தனே வயித்திய நாதா, திருவள ருன்றுட் பதநிழ லருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (16)

திருக்கண்ணார்கோவில்.

காய்கனி நுகர்ந்துங் கானிடை வதிந்துங் கதிதனை மனதினு நினையேன், பேயனே கண்ணார் கோவிலா வருள்வாய் பித்தனே பிறையணிந் தவனே, தாயெனு முருகு வளர்கோதை மணந்த தற்பரா விந்திரன் வணங்கும், தேய்பிறை யணி கண் ணுயிர நாதா செல்வமே கருணைவா ரிதியே. (17)

(திருக்கடைமுடி) கீழூர்.

அல்லியங் கமல மலருறை யயனு ரருச்சனை புரிந்திடு மாசே, நல்லசெய் யாருங் கடைமுடி நாடி நலமுட னமரபிராமி, வல்லிமென் கொடிவாழ் பவளமால் வரையே வள்ளலே கடைமுடி நாதா, தில்லையிற் காளி யுடன்மிக நடித்த செல்வமே கருணைவா ரிதியே. (18)

திருநின்றியூர்.

நாற்றிசை பரவு மிலக்குமி தொழுத நாதனே நான்மிக நடுங்கக், கூற்றுவன் வரினென் கொடுவினை நன்னம கூறுமோ தேறுமா றுரையாய், தோற்றிய புகழ்சேர் நின்றியூ ருறையுந் தோன்றலே யிலக்குமீச் சுரனே, தேற்றமா ருலக நாயகி பாகச் செல்வமே கருணைவா ரிதியே. (19)

திருப்புன்கூர்.

அருப்புழூ புலிஞர் பொருப்புறழ் குயத்தி லருங்கிடை நிக ர்த்தசெவ் விதழில், விருப்புற லாகா தெனிற்செருப் புரியும் வெய்யவென் மனந்திருப் பிடுவாய், நெருப்புமிழ் மழுவா சொக்கநா யகிசேர் நிமலனே நந்தனர் வணங்குந், திருப் புன்கூர் மேவுஞ் சிவலோக நாதா செல்வமே கருணைவா ரிதியே. (20)

திருநீடூர்.

தும்பிகள் பாடுஞ் சோலைசூழ் நீடூர்ச் சோமநா தேசனே துலங்கும், உம்பர்க டுத்திக்கு மிந்திரன் வணங்கு மொருவ னே வேயுறுந் தோளி, நம்புறு பரனே நாயினேற் கருள்வாய் நாதவே தாந்தனே சிவனே, செம்பொனேர் கடுக்கை யணிந் தசெஞ் சடையாய் செல்வமே கருணைவா ரிதியே. (21)

திருஅன்னியூர்.

அன்னமங் கங்கி னுலாவுறு மன்னி யூருறை யாபத்சகாயா, பன்னரும் வருணன் பரவிடும் பரனே பங்கினிற் பெரியநா யகியாய், அன்னமுந் துகிலு மரும்பொனு மடியேற் களித்து நின் னடியையு மருள்வாய், சென்னியி லறுகு கூவிள மணி ந்த செல்வமே கருணைவா ரிதியே. (22)

(திருவேள்விக்குடி) யென்னுந்திருத்துருத்தி.

வரிக்குழன் மகளை மன்னவன் மகிழ்ந்து வாழ்ந்திட மணமு டித் தவனே, அரியயன் புகழ்வேள் விக்குடி யமரு மப்பனே யன்னையே யரசே, பரிமள சுகந்த நாயகி மணந்த பண்பகல் யாண சுந் தரனே, திரிபுர மெரித்த சோதியே யாள்வாய் செ ல்வமே கருணைவா ரிதியே. (23)

### திருவெதிர்கொள்பாடி.

மன்னனை யெதிர்கொண் டழைக்க மாதுலன்போல் மருவிய வோருரு வெடுத்தே, அன்னவன் றனையாண் டிடுமெரு மருந்தே யருமயி ராவதேச் சுரனே, பன்னுதற் கரிய மலர்க்குழ லம்மை பண்பனே யென்னையாண் டருள்வாய், தென்னம ரெதிர்கொள் பாடிவா ழரசே செல்வமே கருணைவாரிதியே. (24)

### திருமணஞ்சேரி.

அரியமன் மதனு மாமையும் வணங்கு மருள்வள்ள னயகவமுதே, மருவிய யாழின் மென்மொழி யாளை மணந்தவா வெனக்கருள் புரிவாய், ஒருமணம் புரியும் பல்லியத் தொலியே யொலிக்கட லோசையை யடக்கும், திருமணஞ் சேரி முளைத்த செங்கரும்பே செல்வமே கருணைவா ரிதியே. (25)

### திருக்கொறுக்கை.

அனங்கனை யெரித்த கொறுக்கைமா நகரி லமரும்வீரட்டகா தேசா, மனங்கவ ரட்ட வீரட்ட தலத்தில் மருவிய மாசிலா மணியே, கனங்குழை யணிஞா னாம்பிகை மணந்த கணவனே வறுமைதீர்த் தருள்வாய் தினந்தினந் தேவர் பரவுறு மரசே செல்வமே கருணைவா ரிதியே. (26)

### திருக்கருப்பறியலூர்.

உருக்கிளர் குற்றம் பொறுத்த நாதேசா வும்பர்கட் கரசன் மெய் நடுங்கிச், செருக்கினிற் புடைக்கச் சினந்தவற் கருளுஞ் செம்மலே கோல்வளை யம்மை, மருக்கிளர் மாலை மணந்தனி லணிய மனமகிழ்ந் தவவெனக் கருள்வாய், திருக்கருப் பறியலூர்தனில் வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (27)

திருக்குரக்குக்கா.

கோணுறு பதியை யணிந்தமெய்ப் பொருளே குரங்குபூ சித்திடு மரசே, தாணுவே பெரிய கொந்தள வல்லி தலைவ னே கொந்தள நாதா, பேணுறும் வளஞ்சால் குரக்குக்கா வாழும் பேரருளே யெனக் கருள்வாய், சேணுறு முகிலைச் சிரசினி லமைத்த செல்வமே கருணைவா ரிதியே. (28)

திருவாழ்கொளிபுத்தூர்.

செய்யமால் மாணிக் கந்தனை வைத்துச் சிவசிவ வெனத் தொழு தேத்தும், ஐயவைம் பொறியிற் குறும்பற வடியேற் கருள்புரிந் தாக்கமீந் தருள்வாய், உய்யவண் டமர்பூங் குழலி யை மணந்த வுத்தமா மாணிக்க வண்ணா, செய்யுடுத் தோங்கு ம் வாழ்கொளி புத்தூர்ச் செல்வமே கருணைவாரிதியே. (29)

திருமண்ணிப்படிக்கரை.

நீங்கரும் புகழ்சேர் நீலகண் டேசா நித்தனே யத்தனே நிம லா, பாங்குறு மமிர்த கரவல்லி பங்கா பகர்பசும் பொன் னெனக் கருள்வாய், தாங்கரும் விடத்தை மிடற்றினிற் கொ ண்ட தலமெனப் புகழ்படைத் தோங்கும், தேங்கமழ் பொழி ன்மண் ணிப்படிக் கரைவாழ் செல்வமே கருணைவா ரிதியே. (30)

திருவோமாம்புலியூர்.

கொலைத்தொழில் புரியும் புலிக்கும் வேடனுக்குங் கூடறும் பெரும்பத மளித்த, நிலவுலா வியசெஞ் சடையனே மணி யே நின்றிரு வடிமல ரருள்வாய், புலவர்கள் புகழோ மாம்பு லி யூர்வாழ் பூங்கொடி நாயகி பாகா சிலைமலை கரத்தாய் துயர் தீர்த்த நாதா செல்வமே கருணைவா ரிதியே (31)

திருக்காறாட்டுமுள்ளூர்.

இந்தனம் புகலும் பதஞ்சலி முனிவ ரேத்திய வெம்பெரு மானே, வந்தனை புரிந்து பாடவ ரிசையே வயங்குகா றாட்டு முள் ளூர்வாழ், அந்தமார் காறார் குழலியை மணந்த வப்ப னே பதஞ்சலி நாதா சிந்தனை புரியே னெனினுநீ யருள் வாய் செல்வமே கருணைவா ரிதியே. (32)

திருநாரையூர்.

நாரைமுன் றொழுத நாரையூ ரழகா நவின்றிடுஞ் சௌந் தர நாதா, நீரையு மதியு மணிந்தசெஞ் சடையா நின்மலா புகழ்பெறு நினது, பேரையான் புகலேன் பூசியே னெனி னும் புனிதனே யெனக்கருள் புரிவாய், சீருருக் கொள் ளுந் திரிபுரசுந் தரிவாழ்ச் செல்வமே கருணைவா ரிதியே 33)

திருக்கடம்பூர்.

உருக்கிளர் கடம்பூர்ச் சோதிமின் னம்மை யொன்றிவா ழமுதக டேசா, மருக்கிள ரமுத மெழத்தவஞ் செய்த வாச வன் றனக்கருள் வாழ்வே, குருக்களை விருந்தைச் சுற்றமுற் றவரைக் குறித்துவந் தனைசெயாப் பெரிய, செருக்கினை யறு த்தென் றனக்குநீ யருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (34)

திருப்பந்தணைநல்லூர்.

கள்ளவிர் கூந்தற் றேவகன் னிகையுங் காமதே னுவுந் தொழுஞ் சிவனே, வள்ளலே பெரிய காம்பன்ன தோளி வாழ்த்திடும் வார்சடை முடியாய், பள்ளநீ ருடுத்த பந்தணை

நல்லூர்ப் பசுபதீச்சுர வெனக் கருள்வாய், தெள்ளிய நீற்றை யணிந்தசெம் மேனிச் செல்வமே கருணைவா ரிதியே. (35)

திருக்கஞ்சனூர்.

கொக்கிற கானே திக்குடையானே கோவண க்கீளுடை யானே, அக்குடை யானே யக்கினீச் சுரனே யக்கினி தொழுதிடு மமுதே, கக் குதேன்சோலைக் கஞ்சனூ ருறையுங்கற்பக நாயகி கணவா, செக்கரஞ் சடையா வெனக்கருள் புரிவாய் செல்வமே கருணைவா ரிதியே. (36)

திருக்கோடிகா.

நல்லமுக் கோடி முனிவர்க டொழுத நான்மறை முடியம ரமுதே, வல்லியங் கொடுத்த வுரியணிந் தவனே வாழ்வடி வாம்பிகை தலைவா, கொல்லியல் யானை தனையுரித் தவனே கோடிகா வேச்சுர வருள்வாய், செல்லமர் சோலைக் கோடிகா வுறையுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (37)

திருமங்கலக்குடி.

ஒருசிவ பத்த ருயிர்துறந் தும்பின் னுமையரு ளாலுயிர் பெற்றுத் தரிசனஞ் செயுமங் கலக்குடி யமருந் தாணுவே தவித்திடா தருள்வாய், மருவிய பிராண வரதனே மணியே மங்கள நாயகி கணவா, திருவள ரமுதே தேனினு மினிய செல்வமே கருணைவா ரிதியே. (38)

திருப்பனந்தாள்.

பல்வளை யணிந்த தாடகைக் காகப் பகர்தலை குனித்திடும் பரனே, நல்லவர் புகழுந் திருப்னபந் தாள்வாழ் நாககந் கண

வெனக் கருள்வாய், அல்லியற் குழலார் பெரியநா யகிசே ரழகனே சடையப்ப நாதா, செல்வகை நன்மை யறிகிலே னருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (39)

திருவாய்ப்பாடி.

சந்தத மும்பாற் குடமுடைந் திடச்செய் சம்புவே யாயனுக்கருளும், அந்தமார் திருவாப்பாடியிலுதித்த வப்பபா லுகந்தநா தேசா, கந்தனை யீன்ற பெரியநா யகிசேர் கண்ணுதலேயெனைக் காப்பாய், செந்திரு மாலும் பிரமனும் போற்றுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (40)

திருச்சேய்ஞலூர்.

அல்லலம் பிறவி தொலைத்தசண் டேசற் கனுக்கிர கஞ்செயு மமுதே, தொல்லைய வினையை நினைந்துநைந் துருகுந் துணையிலிக் கரும்பத மளிப்பாய், சொல்லருஞ் சகிதே வியின்வலப் பாகா சோதியே சத்தகி ரீசா, செல்லுறை பொழில்சூழ் சேய்ஞலூ ருறையுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (41)

திருந்துதேவன்குடி.

சேவலங் கொடியான் றனைப்பெறுஞ் சிவனே திருந்துதேவன்குடித் தேனே, பாவனை புரியு மருமருந் தம்மை பண்பனே நண்புதந் தருள்வாய், மாவமுத் திடமோ மறைமுதற் பொருளே மான்மழு தரித்திடு மமுமே, தேவர்க டுதிக்குங் கற்கடேச் சுரனே செல்வமே கருணைவா ரிதியே. (42)

## திருவியலூர்.

சங்கரா யோகா நந்தநா தேசா சம்புவே சௌந்தரநா யகிசேர், பங்கனே விறந்த வடியவர் பிழைக்கப் பரிந்தருள் செய்திடும் பரனே, மங்குலே முடியி லமைத்திடு மணியே மனத்துய ரொழித்தெனக் கருள்வாய், செங்கரும் பாருங் கழனிசூழ் வியலூர்ச் செல்வமே கருணைவா ரிதியே. (43)

## திருக்கொட்டையூர்.

பூவுறை மறையோன் றிருவுறை மார்பன் போற்றுதற் கரியனே பொன்னே, மேவுறு மார்க்கண் டேயர்பூ சிக்கும் மேலவா மேகமார்ப் பெடுக்குங், காவமர் கொட்டை யூருறை கவுரி கரிசில்பந் தாடிபங் குடையாய், சேவுயர்த் திய கோடீச்சுர வருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (44)

## திருவின்னம்பர்.

கொழுத்தசெங் கமலக் குரிசிலுங் கொலைசூழ் கொடுந்திகிரிக்கைமா லவனும், வழுத்துதற் கரிய வெழுத்தறி நாத வள்ளல்பூங் கொம்புநா யகிசேர், அழுத்தமார் மலைவாழ் குறுமுனிக் குபதே சித்திடு மத்தனே யருள்வாய், செழித்தவர் வதியு மின்னம்பர் வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (45)

## திருப்புறம்பயம்.

கரும்பன சொல்லம் மையைமணந் தவனே கான்வழிந் தொழுகுசெந் தேனே, மரித்திடுங் கணவன் பிழைத்திடச் செய்த

மன்னிய புறம்பயத் தரசே, நெருப்புறழ் மேனிச் சாட்சிநா தேசா நித்தனே யெனக்குநீ யருள்வாய்,செருப்புரிவிடையாய் சிவசிவ சம்போ செல்வமே கருணைவா ரிதியே (46)

திருவிசையமங்கை.

வசையில்வெண் பிறையை யணிந்தசெஞ் சடையாய் வலத்தினில் மங்கைநா யகிவாழ், விசையமங் கையனே யருச்சுனன் வணங்கும் விசயநா தேசனே விமலா, இசையினுன்னைத் துதித்துநான் வழுத்த வீசனே யெனக்குநீயருள்வாய் திசைமுழு தேத்து மெண்குண நிதியே செல்வமே கருணைவா ரிதியே. (47)

திருவைகாவூர்.

அரும்புகழ் மிகுந்த விலக்குமி தொழுத வப்பனே யடியனேற் கருள்வாய், இருவைகூற் படைக்கை வில்வவ னேச, வெழில்பவ ழக்கை நாயகியாய், தருவைவேர் பறித்து மலைதலை புறட்டுந் தண்ணிய பொன்னிநீ ருடுத்த, திருவைகா வூர்வாழ் தேவர்தம் தேவே செல்வமே கருணைவா ரிதியே. (48)

திருவடகுரங்காடுதுறை.

அவலம தாகக் கொடுவினை யியற்றி யருநர கினுக்கு மாளாக்குங், கவலையை யொழிப்பாய் வடகுரங் காடு துறைவளர் கற்பகக் கொழுந்தே, பவளவா யழகு சடைமுடி யம்மை பாகனே வாலிமுன் வணங்குஞ், சிவசிவ வழகு சடைமுடி யுடைய செல்வமே கருணைவா ரிதியே. (49)

திருப்பழனம்.

அண்ணலே திக்குப் பாலகர் தொழுத வப்பனே யாபத் சகாய, கண்ணொரு மூன்று முடையகண் மணியே காத்திடும் பெரியநா யகியை, நண்ணிய வரசே நாயினுங் கடையே னப்பனே யெனக்குநீ யருள்வாய், திண்ணியோர் புகழுந் திருப்பழ னத்துச் செல்வமே கருணைவா ரிதியே. (50)

திருவையாறு.

தருமதே வதைபூ சித்திடு பவனே தாணுவே தற்பரப் பொருளே, அருதிரு நாவுக் கருங்கை லையைநீ யன்புடன் காட்டுமோ ரமுதே, கருவையா னடையா தாளறம் வளர்த் தாட் காந்தனே கந்தனைப் பயந்த, திருவையாற் றெழுந்த செம்பொற் சோதியனே செல்வமே கருணைவா ரிதியே (51)

திருநெய்த்தானம்.

நம்பிநல் வாக்கின் செல்வி பூசித்த நாதநெய் யாடிய வப் பா, வம்பவிர் குழல்வா லாம்பிகை மணந்த வள்ளலே வறுமை தீர்த் தருள்வாய், உம்பர்கள் வழுத்துநெய்த் தானமா னகரி னுத்தமா வுயர்ந்தகற் பகமே, செம்பொனை நிகர்த்த செஞ் சடை முடியா செல்வமே கருணைவா ரிதியே. (52)

திருப்பெரும்புலியூர்.

இருப்பினும் வலிய காற்புலி முனிவந் திறைஞ்சிய வெம் பெருமானே, விருப்புறு பொருளை யனுபவித்திடவும் விரிமல ரடியையு மருள்வாய், அருப்பிள நகையிற் சவுந்தரநா யகி சேரலே பிள மதியமர் சடையா, திருப்பெரும் புலியூர் வியாக் கிர புரீசா செல்வமே கருணைவா ரிதியே. (53

## திருமழபாடி.

துன்னிய வமரர்க் கிறையவன் றொழுத தோன்றலே துயரொழித்தாண்டு, நன்னிதி யளித்து முன்னடி யவரை நாடிவாழ்ந் திடவுமெற் கருள்வாய், மன்னிய வழகாம்பிகைமணவாளா வச்சிர தபங்கநா தேசா, சென்னியம் பிறையா மழபாடி யப்பா செல்வமே கருணைவா ரிதியே. (54)

## திருப்பழுவூர்.

கருப்பையி லுறுத்தும் பழவினை யறுக்குங் கடவுளே கசடனேற்கருள்வாய், விருப்புடன் சப்த கன்னிகை வணங்கும் விமலனே விளங்குநன் மணியே, அருப்பெனு முறுவ லுடையவம் பிகையா மருந்தவ நாயகி யமரும், திருப்பழு வூர்வாழ் வடமூல நாதாச் செல்வமே கருணைவா ரிதியே. (55)

## திருக்கானூர்.

ஒப்பிலா மணியே யுயர்சிவ யோக நாயகி யுனைத்தெரிசித்த, அப்பனே யரியசெம் மேனிநா தேசா வரும்பொனே யமரர்தந் தேவே, இப்பெரும் புவியின் வறுமையா லுழலா தெனக்குநின் னருள்சுரந் தருள்வாய், செப்பிளந் தனத்தார் பரவுறுங் கானூர்ச் செல்வமே கருணைவா ரிதியே. (56)

## திருவன்பிலாலந்துறை.

கரும்பினின் கணுக்க டெறித்திடு முத்தங் கழனியி லிமைத்திடும் வளத்தால், அரும்புக ழுடைத்து மிகுந்தசீர் தழைத்த வன்பிலா லந்துறை வாழ்வே, பெரும்புக ழருள்ய் ாசௌந்தரநா யகிவாழ் பித்தனே சத்தியவா கேசா, திருந்திய பிரமன் முதலியோர்வணங்குஞ் செல்வமே கருணைவாரிதியே (57)

திருமாந்துறை.

நீற்றொளி மேனி நிமலனே திருமாந் துறையில்வாழ் நீனி
ற மிடற்று, நாற்றிசை புகலழ காலுயர்ந் தம்மை நாயகா
கண்ணுவரேத்துங், காற்றுணு மவரக் கங்கணு சிவனே கரு
தரு மாம்பிர வனேசா, தேற்றினின் னருளைச் சுரந்தருள் புரி
வாய் செல்வமே கருணைவா ரிதியே. (58)

திருப்பாற்றுறை.

சூலியோடாடுஞ் சூலியே யருள்வாய் சோதியே மூலநா
தேசா, ஏலவார் குழலார் மேகலாம் பிகையை யிணைந்திடு
மெம்பெரு மானே, மால்விடை யவனே மார்க்கண்ட ரேத்த
மன்னிய செய்யமேனியனே, சேலுலாம் பண்ணைப் பாற்று
றை வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (59)

திருவானைக்கா.

தூண்புனை புயத்து வயவரிற் சேரேன் சோதியே சூழொழி
விளக்கே, மாண்புறும் யானை தொழுதிடும் பரனே வாகை
பெற் றுயர்பெற வருள்வாய், நாண்மதி புனையுஞ் சம்புகே
ச்சுரனே நல்லகி லாண்டநா யகி வாழ், சேண்புக ழானைக்
காவள ரமுதே செல்வமே கருணைவா ரிதியே. (60)

திருப்பைஞ்ஞீலி.

கார்குழற் பூமி தேவிமுன் றொழுத கடவுளே நீலகண்
டேசா, வார்குழல் வால சௌந்தரி வாழ்த்தும் வள்ளலே
வாஞ்சைவைத் தருள்வாய், தேர்திற மன்னர் நடத்தொலி
மடவார் செழுமணத் தொலிதனை யடக்கும், சீர்வளர் பைஞ்
ஞீலித்தல மமருஞ் செல்வமே கருணைவா ரிதியே. (61)

திருப்பாச்சிலாச்சிரமம், திருவாசி.

ஆற்றலார் கொல்லி மளவனின் மகளை யாற்றிய ஞான சம் பந்தர், நாற்றிசை பரவப் பாடிய தலத்தாய் நலமிக வென க்குநீ யருள்வாய், போற்றுரும் பால சௌந்தரி பொருந்தும் புண்ணியா பாச்சிலாச் சிரமத்தாய், தேற்றிய புகழ்சேர் மாற் றறி வரதாய் செல்வமே கருணைவா ரிதியே. (62)

திருவீங்கோய்மலை.

அறுகணி முடியா யகத்திய னியா யருச்சனை புரிந்தவா ரமுதே, குறுநகை முல்லை மரகதவல்லி கொஞ்சுறு மரகதா சலனே, நறுநெய்பா றயிர்தேன் சந்திர லாட்டே னப்பனே நல்வழி யருள்வாய், சிறுபிறை தவழீங் கோய்மலை யமுதே செல்வமே கருணைவா ரிதியே. (63)

காவிரியின் வடகரையின் ஸ்தலங்கள் சுஈ

முற்றிற்று.

உ

சோழநாடு

காவிரியின் தென்கரை.

## திருவாட்போக்கி.

இருநிலம் புகழிரத் தினகிரி நாதா விசைந்தவாட் போக்கி யில் வாழும், பெருமைவாய் சுரும்பார் குழலியை மணந்த பெரும்புக ழாளனே யருள்வாய், கருமிடற்றெந்தாய் காவ லன் றனக்குக் கருதரு மணியளித் தவனே, திருமக ளூரத் தோன் றேடரும் பொருளே செல்வமே கருணைவாரிதியே (1)

## திருக்கடம்பந்துறை.

வேதநல் லுருவாம் விண்ணவரேத்தும் வித்தகா வெனக்கு நீ யருள்வாய், தாதவிழ் குழன்முற் றிலாமுலை மகிழுந் தாணுவே கடம்பவ னேசா, மாதர வாமை யோடுடை மணியே மாக்கடம் பந்துறை வாழ்வே, சீதமா மதிசேர் சிரமுடை யோனே செல்வமே கருணைவா ரிதியே. (2)

## திருப்பராய்த்துறை.

கழையமர் கழனி சூழ்பராய்த் துறைவாழ் கருதருங் கற்பகக் கொழுந்தே, தழையருள் பொழியும் பராய்த்துறை நாதா தனதன்பூ சித்ததற் பரனே, மழைமதர் வேற்கட் பொன்மயிலாம்பாள் மணந்திடுஞ் சோதியே மணியே, செழியமண் பொருள்பொன் மிகவெனக் கருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (3)

## திருக்கற்குடி.

கையில்வெண் மழுவா ருச்சிநா தேசா கருணையே யஞ்சநா க்ஷியைச்சேர், மெய்யனே திருக்கற் குடிதனி லமரு மேலவா சடலையு ணடிக்கும், ஐயனே யரசன் றனக்கருள் பரனே யமுதத்தின் றெளிவினின் றெளிவே, செய்யசெஞ் சடையாய் கடைக்கணித்திடுவாய் செல்வமே கருணைவா ரிதியே. (4)

## திருமூக்கீச்சரமாகிய, உறையூர்.

கிஞ்சுக முகைப்பூஞ் செஞ்சடா டவியாய் கிளருறை யூர்தனில் வாழும், அஞ்சுசெம் முகத்தாய் பஞ்சவர்ண் ணேசா

வன்னமூர் பவன்றொழு தேத்து, மஞ்சுறை கூந்தன் மருவிய
காந்தி மதியிடங் கொண்டமா மணியே, செஞ்சரண் மலரை
யெளியனேற் கருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (5)

## திரிசிரபுரம்.

உருசிர மத்தாற் கருப்பிணி வருந்த வொன்றிய தாயெனத்
தோன்றிக், கருசிர முதைய மாகவு மறைந்தோய் கழலிணை
மலரெனக் கருள்வாய், வருசிர மணிந்த தாயுமா னவனே
மட்டுவார் குழலி நாயகனே, திருசிரத் தையின்வாழ் திரிசிர
புரத்துச் செல்வமே கருணைவா ரிதியே. (6)

## திருவெறும்பியூர்.

எறும்புமுன் றொழுத வெறும்பியூ ரெறும்பீச் சுரவெனை
யாண்டவெம் மானே, நறுமுறுக் கவிழு மலரணி கூந்த னறு
ங்குழ னாயகி தலைவா, வறுமையென் கடலி னிடைக்கிடந்
துழலும் வலியிலிக் கின்னருள் சுரந்து, சிறுமையை யொழித்
துப் பெருமையை யருள்வாய் செல்வமே கருணைவா
ரிதியே. (7)

## திருநெடுங்களம்.

நெடியமால் பிரம னிதந்தொழு தேத்து நெடுங்கள நித்திய
சுந்தரனே, வடிவினிற் சிறந்த வொப்பில்நா யகியை வாய்
ந்தவா வறுமையங் கடலிற், குடிகொளு மெளியே னாகிய
வெனக்குன் குரைகழ னிழறனை யருள்வாய், திடமெய் வங்
கிய சோழனுக்கருள்பரனே செல்வமே கருணைவாரிதியே.(8)

### திருமேலைத்திருக்காட்டுப்பள்ளி.

வான்முக டறிவா னுறவர வாங்கண் வருதலுஞ் சகுன மின் மையதாற், றுன்வகுத் தறிந்து நின்றமா மதில்கள் சார் திருக் காட்டுப்பள் ளியில்வாழ், மான்மழுக் கரத்தீ யாடிய வப்பா வார்கொண்ட முலையம்மை தலைவா, தேன்மொழி யரசன் மனைவியார்க்கருளுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (9)

### திருவாலம்பொழில்.

நெல்லின்வெண் மணியு நீள்கழை மணியு நிறைந்தவா லம்பொழி லுறையும், வல்லவ ஞானும் பிகைமணந் தேத்தி வாழ்த்திடுமாத்மநாதேசா, இல்லையென் றிரக்குந் தொழிலொழித்தருள்வா யெண்வகைவசுக்களு மேத்துந், தில்லையாட்டெடுத்த சிவபெருமானே செல்வமே கருணைவா ரிதியே. (10)

### திருப்பூந்துருத்தி.

என்பணித் தொடையும் வன்பணித் தொடையும் மேடவிழ் மலர்விரி தொடையும், அன்பினுற் றன்மை யொன்றென வணியு மப்பகந் தருவருக் கருள்வோய், நன்மைசேரழகா லமர்ந்தநா யகிவாழ் நல்லபூந் துருத்தியி லமரும், சின்மயா வெனையாள் புஷ்பவனேசா செல்வமே கருணைவா ரிதியே. (11)

### திருக்கண்டியூர்.

கஞ்சநாண் மலரோன் கடுஞ்சிரங் கொய்த கருதருந் தலமென வழங்கும், மஞ்சிவ ரிஞ்சித் திருக்கண்டி யூர்வாழ் மங்கள நாயகி தலைவா, அஞ்சொலார் பாட லாடலான் மிகுந்த

வரும்புக ழமைந்திடுந் தளியிற், செஞ்சுட ரேயாள் வீரட்டா
நேசா செல்வமே கருணைவா ரிதியே. (12)

திருச்சோற்றுத்துறை.

நாவுயர் புலவர் துதிசெயும் புகழார் நான்மறை யாளனுக்
கிரங்கிப், பூவுறை யயனும் போற்றரும் பெரிதாய்ப் பொருந்
துல வாவமு தளித்த, ஒவுயர்தொலையாச் செல்வனேயாள்வா
யொப்பிலாம் பிகைமண வாளா, சேவுயர் திருச்சோற் றுத்
துறை வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (13)

திருவேதிகுடி.

கங்கைவார் சடையில் வளர்வுறுப் பிறையுங் கடுந்துளை
வளையெயிற் றரவும், சங்கையின் றுகவதிர்தர முடித்த சம்பு
வே நான்மறை தொழுவோய், மங்கையர்க் கரசி பங்கனே
யாள்வாய் வரதனே வேதபு ரீசா, செங்கையா வேதி குடித
னில் வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (14)

(திருத்தென்குடி) திட்டை.

மட்டவிழ் கொன்றை மதிமலி வேணி மருவிய பசுபதி
நாதா, எட்டரும் பசும்பாம் பிறைஞ்சிடும் பொருளே யென்
னையா ளுலகநா யகிசேர், நிட்டையிலிருக்கும் நிட்களா
நிறைந்த நின்மலா வெனக்குநீ யருள்வாய், திட்டையின்
முளைத்த சிவக்கொழுந் தேயென் செல்வமே கருணைவா
ரிதியே. (15)

திருப்புள்ளமங்கை.

வெள்ளவே ணியனே பசுபதி நாதா வேதமே விளங்கு
மெய்ப் பொருளே, கள்ளிவர் குழலா ரல்லியங் கோதை

காந்தனே சுந்தரர் கொணர்ந்த, நள்ளிரு ணிகர்த்த விடந்தனை யுண்ட நாதனே புள்ளமங் கையில்வாழ், தெள்ளிய நீற்றை யணிந்ததிண் டோளா செல்வமே கருணைவா ரிதியே. (16)

## திருச்சக்கரப்பள்ளி.

ஆமையோ டணியா லந்தரியீசா வல்லியங் கோதைநா யகனே, காமனை யழகில் வென்றவர் வதியுங் கருதருஞ் சக் கரப்பள்ளிச், சோமனை வனைந்த சோதியே சுடரே சொல்லிர சிதகிரி யோனே, தீமையை யொழித்தாள் தேவர்பூ சித்த செல்வமே கருணைவா ரிதியே. (17)

## (திருக்கருகாவூர்)

பொன்னுருக் கியநேர் செஞ்சடை யதனிற் புனிற்றிளம் பிறையணி புனிதா, முன்னுவ துதவு முல்லைவ னேசா முகிழ் நகைக் கரும்பனை யாள்சேர், அன்னையே மதிபூ சித்திடு மர னே யடியனேற் கின்னரு ளளிப்பாய், தென்னமர் பொழில் சூழ் திருக்கரு காவூர்ச் செல்வமே கருணைவா ரிதியே. (18)

## (திருப்பாலைத்துறை)

பாவலர் புகழ்பா லைத்துறை வாழும் பரம்பரை தவள வெண் ணகையாள், மேவுறு பாலை வனேச்சுர வருள்வாய் மேனுல கோர்புகழ் புனிதா, காவமர் தாரு காவன முனிவர் கடும்புலி யுரித்தணிந் தவனே, தேவர்தந் தேவே செகந்தொழு மரனே செல்வமே கருணைவா ரிதியே. (19)

(திருநல்லூர்)

அல்லலுற் றடைந்தே னதுதவிர்த் தாள்வாய் யாதியே திரிபுரசுந் தரிசேர், வல்லவ பெரியபாண் டேச்சுர பரம வள்ளலே யப்பர்தன் சிரத்தில், சொல்லரு மரைப்பூந் திருவடி சூட்டுஞ் சோதியே துலங்கு மெய்ப்பொருளே, செல்லுறை சோலை மலர்விரிநல்லூர்ச் செல்வமே கருணைவா ரிதியே. (20)

(திருஆவூர்)

முத்தவெண் ணகையாள் மங்களாம் பிகைசேர் முதல்வனே முருக்கழன் மேனி, அத்தனே பசுபூ சித்திடுந் தேவே யடியனேற் கடியிணை யருள்வாய், கொத்திழி பிரசங் குளித்துவண் டினஙகள் குறுஞ்சிறை புலர்த்து தண்டலைசூழ், சித்திசே ராவூர்ப் பசுபதீச் சுரனே செல்வமே கருணைவா ரிதியே. (21)

(திருச்சத்திமுற்றம்)

கண்ணனென் கணன்றுழ் சிவக்கொழுந் தீசா கருதரும் பெரியநா யகிசேர், வண்ணவெண் ணீற்ருய் சத்திமுற் றத்தாய் வரிப்புலி கொடுத்தநல் லுடையாய், அண்ணலே யுமையா ளருச்சனை புரிந்த வப்பனே யெனக்கருள் புரிவாய், திண்ணிய மலையைத் தனுவென வளைத்த செல்வமே கருணைவா ரிதியே. (22)

(திருப்பட்டீச்சுரம்)

மட்டிலா முத்துப் பந்தரை மகிழ்ந்து மருவிய சம்பந்தற் களித்த, சுட்டுருப் பொருளே சொல்லரும் பட்டீச் சுரத்தில்

வாழ் சோதியே யாள்வாய், பட்டிலிங் கேசா வட்டநல் லுருவப் பல்வளை நாயகி தலைவா, சிட்டர்கள் பரவும் புனிற்றுமின் மதியாய் செல்வமே கருணைவா ரிதியே. (23)

(திருப்பழையாறை) (வடதளி)

நீர்மலிந் துறையு மருடசோ மேசா நினைத்தவை யீந்துகாத் தருள்வாய், ஏர்பெறு சோம கலாம்பிகை தலைவா வெழின்மதி யாண்ட வெம்மீசா, நேர்மன மில்லா வமணர்க ளொளிக்க நேயவா கீசர்க்கா மீட்டும், சேர்பழை யாறை வடதளி யமருஞ் செல்வமே கருணைவா ரிதியே. (24)

(திருவலஞ்சுழி)

கருவலஞ் சுழியாங் கடற்கரை யேறக் கருணைசெய் பெரியநா யகியின், அருமணத் தலைவா கற்பக நாதா வரியவிந் திரன்றெழு மமுதே, ஒருவலை யறியா மங்கையர் கோதை யொழுகுதேன் வழிந்துலா மறுகுத், திருவலஞ் சுழிவாழ் கனகமா மலையே செல்வமே கருணைவா ரிதியே. (25)

(திருக்குடமூக்கு) (கும்பகோணம்)

அஞ்சிர நாலோ னமைத்திடு குடத்தி லளவிளாச் சராசரப் பொருளும், துஞ்சுறு மமுதங் காண்குட மூக்கிற் றுலங்கிடுந் தகளிலாச் சிவமே, பஞ்சின்மெல் லடியாள் மங்களாம்பிகைசேர் பாகரும் பேச்சுர பரம, செஞ்சவே யருள்வாய் மும்மலந் தொலையச் செல்வமே கருணைவா ரிதியே. (26)

(திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம்) (கும்பகோணம்)

விலகிவில் லுமிழும் வெங்கதி ரவன்பூ சித்திடும் விமலனே யரனே, இலகொளி பரப்பி யேழ்நிலைமாட மிமைத்திடுங் குடந்தைக் கீழக்கோட்டத், துலகமேத் தெடுக்கும் பெரியநா யகியை யுடைவா வெனக்குநீ யருள்வாய், சிலைவிலை வளைத்த மடந்தை பாகேசா செல்வமே கருணைவா ரிதியே. (27)

(திருக்குடந்தைக்காரோணம்) (கும்பகோணம்)

கருமுகை விரிக்கு நாண்மலர்க் குவளை கறித்துத் தன்கன் றுளிபெருமை, சொரிதரு பாலாற் செழித்திடும் படப்பை சூழ்ந்திடு குடந்தைக் காரோணம், பொருந்திய தேனார் மொழியம் மைபாகா பொருளருள் சோமநா தேசா, திரிந்துலா வுறுவெண் டிங்கள்பூசித்த செல்வமே கருணைவா ரிதியே.(28)

(திருநாகேச்சரம்.)

கொம்மைகொண்டிறுமாந்தடி பரந்தோங்கிக் குவிமுலைக் கடைசியர் கருங்கண், வெம்மையினிழலைக்கஃலெனமள்வர் விரும்பியன்னீரிறைத்துழலுஞ், சும்மையார் நாகேச்சரந் தனின் மதியோன் றெழுங்குன்ற முலையம்மைமணந்த, செம்மலே யருள்வாய் செண்பகாரணியச் செல்வமே கருணை வாரிதியே. (29)

(திருவிடைமருதூர்.)

ஒருமகள் வலக்கை நின்றிட மெய்யுண் டொருவன்வேண் டிடவதுங்கொண்டாய், கருவிடைவருந்தா தொப்புயர்விகந்த கனைகழலிணை யெனக்கருள்வாய், பெருவிடையழகா வருணல

முடையாய் பெருநல மாமூலைதலைவா, திருவிடைமருதூர் வளர்மகா லிங்கச் செல்வமே கருணைவாரிதியே. (30)

(திருத்தென் குரங்காடுதுறை.)

குரக்கர சேத்துங் கொன்றையஞ் சடையாய் கோதறு மாபற்சகாயா, முருக்கலர்நிகர்ப வளக்கொடி வல்லி முழுமணம் புரிமுது மையனே, பெருக்கிய வளமார் தென்குரங் காடுதுறையில்வாழ் பேரருள் விளக்கே, திருக்கரச் சிரத்தா யெனக்கருள்புரிவாய் செல்வமே கருணைவாரிதியே. (31)

(திருநீலக்குடி.) (தென்னல்குடி)

காலனை யுதைத்த நீலகண்டேசா கருதரு முமையம்மை பாகா, மேலவர் வதிநீ லக்குடி வாழும் மேலவா வருணன்பூசித்த, மால்விடை யுடையாய் மயங்கிடு மெளியேன் மையறீர்த் தின்னருள் புரிவாய், சீலனே சிரசிற் சிரமுடையவனே செல்வமே கருணைவா ரிதியே. (32)

திருவைகல் மாடக்கோவில்.

வள்ளலே வைகல் மாடக்கோவிலில் வாழ் வைகல்நாதேசனே மணியே, தள்ளரும் புகழ்சேர் வைகல்நாயகியைத் தனிமணம் புரிந்துகொண் டவனே, வெள்ளவே ணியனே யென்மனக் கவலை வேரறுத்தாளவந் தருள்வாய், தெள்ளிய வமிர்தே தேவர்பூசித்த செல்வமே கருணைவாரிதியே. (33)

(திருநல்லம்) (கோனேரிராஜபுரம்)

வல்லவா நல்லத் துமாமகே ச்சுரனே மங்கள நாயகி மருவும், நல்லவா வுமைமுன் றெழுதிடு பரனே நலமுளோர்

தங்களினுறவைப், புல்லிவாழ்ந் தறியாப் பாவியே னெனி னும் பூரியேற் கருணிதி யளிப்பாய், செல்லரு முதுகாட் டிடைநடம் பயிலுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (34)

திருக்கோழம்பம்.

கோலமார் கோழம் பத்துறை யரனே கொடியிடை ச்சவுந் தர நாயகிசேர், நீலமார் மிடற்றாய் கோகிலந் தொழுத நின் மலா கோகிலேச் சுரனே, பாலரு வாயார் பரவுமெய்ப் பரனே பரிந்தெனக் குவந்துநீ யருள்வாய், சேலுலாங் கொடி மாரனையெரித் தவனே செல்வமே கருணைவா ரிதியே. (35)

திருவாவடுதுறை.

துட்டமும் மலமுங் களைந்தரு ளின்பத் துணைத்திரு வடி நிழ லருள்வாய், மட்டருக் குழலொப் பிலாமுலைத் தலைவா மாசிலா மணியெனும் பொருளே, அட்டமா ரிருபா னாகமப் பொருளை யாய்ந்துனை யருச்சனை புரியும், சிட்டரா மூலர் போற்றிடுந் துறைசைச் செல்வமே கருணைவா ரிதியே. (36)

(திருத்துருத்தி) (குற்றாலம்)

மங்கலந் திகழு நாவலூரரார்க்கு மருவுவெண் ணோய் தவிர்த் தவனே, எங்களாண் டவனே துருத்திமா நகரிலிவர் முகி ழாம்பிகைக் கிசைந்த, சங்கரா வேதேச் சுரவெனை யாள்வாய் சம்புவே சதாசிவப் பொருளே, செங்கர மதனில் தமருக முடைய செல்வமே கருணைவாரிதியே. (37)

திருவழுந்தூர்.

பொன்னுல கத்தோர் தம்மக மென்னப் புகுந்துறைந் திட மிக வுயர்ந்து, மின்னொளி காறு மாளிகை மேடை மேவிய

திருவழுந் தூர்வாழ், கன்னலே யட்ட வசுக்களுந் தொழு வோய் காவேனைசவுந்தர நாயகிசேர்,சென்னியம் பிறையாய் வேதபுரீசா செல்வமே கருணைவா ரிதியே. (38)

## திருமாயூரம்.

வஞ்சக முடையே னெனினுநீ யாள்வாய் வள்ளலே மயி லம்மை தொழுவோய், பிஞ்சுமா மதிசேர் செஞ்சடை முடி யாய் பிஞ்ஞகா முகிலின முழங்கும், இஞ்சிசூழ் மாயூ ரத்தினர் தவத்தி லெழுந்த மா யூரநாதேசா, செஞ்சிலைச்சிலையா யஞ் சலைதலைவா செல்வமே கருணைவா ரிதியே. (39)

## திருவிளநகர்.

உருவினிற்சிறந்த தோழிநா யகியை யுடையநற் கருணை யின் வாழ்வே, மருவளரிதழி யணிதுறை காட்டு வள்ளலே மனமுவந் தருள்வாய், அருமறையவனுக் கொருவழிகாட்டு மமலனே யாரழற்பிழம்பே, திருவிளநகர்வாழ் தீஞ்சுவைக் கரும்பே செல்வமே கருணைவா ரிதியே. (40)

## திருப்பறியலூர்வீரட்டானம்.

தக்கனுக்காட்டுத் தலைகொடுத்தவனே தாணுவே பறியலூர் தனில்வாழ், சக்கரமாலுக் கருளிய சிவனே சங்கரா வீரட்டநாதா, இகனெனுமொழியா ரிளங்கொடியாளை யிடத் தினி லமைத்தயீச்சரனே, செக்கரஞ் சடையா ரெந்தையே யாள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (41)

(திருச்செம்பொன்பள்ளி) (செம்பொனார்கோவில்)

அம்பொனே சுகந்தவனவல்லிமருவு மப்பனே யருமருந்தே மென், கொம்பினற்றேனே சொன்னபுரிசா குரிசிலே யெனக் கருள் புரிவாய், உம்பர்தந்தேவன் வணங்கிடு மொளியே உன்னுறையுயிரினுக்குயிரே, செம்பொனார் கோவிலெனுஞ் செம்பொன்பள்ளிச் செல்வமே கருணைவாரிதியே. (42)

(திருநனிப்பள்ளி) (புஞ்சை.)

புத்தமுதனைய பருவதராஜபுத்திரி மனமகிழ்புனித, அத்தனே யட்டவசுக்கள் பூசித்த ஐயனே யென்றனை யாள்வாய், முத்தனேசிவனேநற்றுணையப்பமுதல்வனே முக்கணாயகனே, தித்திக்குந்தேனே திருநனிப்பள்ளிச் செல்வமே கருணைவாரிதியே. (43)

(திருவலம்புரம்) (பெரும்பள்ளம்)

கருவலத்துறைவே னாயினுமைய கனைகழலிணை மலர் நெஞ்சில், ஒருவலனாக வரந்தரல் வேண்டு முயர்வடு வகிர்க் கண்ணி பங்கா, பொருவருமாற்கு வலம்புரிச்சங்கம் பொருக்கிட வளித்த புண்ணியனே, திருவலம்புரத்து வலம்புரிநாதா செல்வமே கருணைவாரிதியே. (44)

திருத்தலைச்சங்காடு.

அப்பனே தலைச்சங்காடுறையரசே யமலனே சங்கருணாதா, இப்புவியின்ற சௌந்தர நாயகியை யிடந்தனிலுடையமெய்ப்

பொருளே, தப்பிலாமாலு மெட்டியோனையுமர்ச் சனைபுரிதனிப் பரஞ்சுடரோ, செப்பருங்கருணை தந்தெனை யாள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (45)

திரு ஆக்கூர்.

செவ்விய விதழி மத்தம்வெள்ளெருக்குச் செருந்திகூவிள மணிமுடியாய், கொவ்வைவாய்க் கட்கநேத்திராம் பிகையாய் கொற்றவா வெற்கருள்புரிவாய், அவ்விய மவித்த வுளத்தொடு மகவா னருச்சனை புரியுமாரமுதே, திவ்வியவாக்கூர்ச் சுயம்புநாதேசா செல்வமே கருணைவா ரிதியே. (46)

திருக்கடவூர் வீரட்டானம்.

இக்குநேர் மொழியார் கண்வலைச்சிக்கி யிதையநொந் தவர் மயற் கடலுட், புக்குழல்வேனுக் கருநெறியளிப்பாய் புகலி யமனை யுதைத்தவனே, திக்களவிகந்த புகழ்க்கடவூர்வாழ் சிரபிராமியின் றலைவா, செக்கர்மேனியனே யமுதகடேசா செல்வமே கருணைவா ரிதியே. (47)

திருக்கடவூர் மயானம்.

பவளவா யன்னமூர்தியை யெரித்தே பகர்கட வூர்மயானத்தில், குவளைநேர் விழியாள் மலர்க்குழல்மின்னம்பாளொடு குலவிவாழ்மணியே, கவளமாக் களிற்றினுரியணி பவனே கடவுளே பிரமபுரீசா, திவளொளிமணியார் கழலெனக்களிப்பாய் செல்வமே கருணைவா ரிதியே. (48)

## திருவேட்டக்குடி.

வண்டு பொழில்வேட் டக்குடிவிளங்கி வாழ்ந்திடுஞ் சாந்தநாயகியைக், கொண்டவா வேட்டையாடிய குழகாக் கோதிலாப்பெரும்பொருளேயென், பண்டைவெவ்வினையை யறுத்தடியமரும் பண்பினை யெனக்கருள் புரிவாய், திண்டிரு மேனியழகனே விடையாய் செல்வமே கருணைவாரிதியே(49)

(திருத்தெளிச்சேரி) (காரைக்கால்) (கோவில்பத்து)

நீண்டவேணியனே பார்வதிநாதா நின்மலா சத்தியம்மை யைச்சேர், ஆண்டவா விசையன் வில்லடிபட்டே யவன்றனக் கருள்புரிந்தவனே, தாண்டிடக்க விக டாழைமுப்புடைக்காய் தகர்ந்திட வுகும்பொழிற்றலைபோய்ச், சேணொடுந் தெளிச் சேரியிலினிதமருஞ் செல்வமே கருணைவாரிதியே. (50)

## திருத்தருமபுரம்.

எற்றநாளெல்லாங் கொடுந்தொழில்புரிந்தே னெண்ணிலே னெண்ணருமறத்தைக், கூற்றுவன் வரின்யா னென்செய்வே னென்னுக் குலையுமென் மனத்துயர் தவிர்த்தே, தேற்றுவாய் தருமைச் சதாமதுராம்பாள் செறிந்தமெய் யர்ழ்முரிநாதா, சீற்றமார் மனத்துத் தருமன்பூசித்த செல்வமே கருணைவா ரிதியே. (51)

## திருநள்ளாறு.

பாட்டளிதுதைந்து பேட்டொடுமுரலும் பசியநெட்டிலை மடற்கைதைக், கூட்டமார் திருநள்ளாறிடைவாழுங் குழக

தெர்ப்பாரண்யேச் சுரனே, நாட்டரும்போக மார்த்தபூண் முலையா ளுதனே நளன்ருெழு பவனே, நீட்டொரு வுருவா சேவடி தருவாய் செல்வமே கருணைவாரிதியே. (52)

திருக்கோட்டாறு.

அன்னமார் கழனிசூழ்ந்தகோட்டாற்றி னமராயி ராவத நாதா, மன்னுவண்டமர்பூங் குழலியையமணந்த வள்ளலே வம் பனேனெனினும், தென்னமர் நினது திருப்பத மளிப்பாய் திகழ்வெள்ளை யானைபூசித்த, சென்னியாறுடையாய் சங்கமர் குழையாய் செல்வமே கருணைவாரிதியே. (53)

திருஅம்பர்பெருந்திருக்கோவில்.

சீரமர்சிலந்திச் சோழராசனுக்குத் திருமணக் கோலங்கா ண்பித்தே, ஏரமரம்பர் பெருந்திருக் கோவி லெழுந்தருள் பிரமபுரீசா, காரமர் கூந்தற் பூங்குழல்வல்லி காந்தனே நின் கழற்றுணையைச், சேரவே யடியேற் கருள்புரிந்திடுவாய் செ ல்வமே கருணைவாரிதியே. (54)

(திருஅம்பர்மாகாளம்) கோவிற்றிருமாளம்.

முன்னொருதொழும்பர் செயுமகமதனின் முழுமதுக் குடங் கொண்டு வந்தே, அன்னமார் கழனியம்பர்மா காள மமர்ந் தருள் காளகண்டேசா, மன்னிய பக்ஷநாயகிதலைவா மதிமலி புரி சடைப் புனிதா, சென்னியைத் திடையாய் சிவசிவசம் போ செல்வமே கருணைவாரிதியே. (55)

## திருமீயச்சூர்.

கரும்பெனும் மொழியார் விழிவலைவிழுந்து கரைமிகக் காண பரிதாகிப், பருவரலுறுவேற் கின்னருளளிப்பாய் பகவனே முயற்சிநாதேசா, உருவினிற்சிறந்த சுந்தரநாயகியை யுடையவா மீயச்சூரரசே, திருந்தியதேவர் பூசனைபுரிந்தசெல்வமே கருணைவாரிதியே. (56)

## திருமீயச்சூரிளங்கோயில். (பேரளம்)

அன்னமென்னடையாண் மேகலாம்பாளை யணைந்தவா வறுகணிசடையாய், மன்னிய சகல புவனநாதேசா மருவிய கலைமகள் வணங்கத், துன்னிய சிவனே பிணிமனக்கவலை தொடர்ந்திடா தெனக்குநீயருள்வாய், தென்னமர் மீயச்சூரிளங்கோயிற் செல்வமே கருணைவாரிதியே. (57)

## திருத்திலதைப்பதி. (கோயில்பத்து)

கங்கையாறுலவுங் காசிமாநகர்வாழ் கருதுசித்தோசி மன்னவர்கோன், தங்கியங்கமர்ந்து தருப்பணம்புரிந்த தனித்திலதைப்பதி யமரும், மங்கைபொற்கொடிநா யகிமணந்தவனேமருவுமுத்தீசனே யருள்வாய், செங்கையை வீசியம்பலத்தாடுஞ் செல்வமே கருணைவாரிதியே. (58)

## திருப்பாம்புரம்.

மருவளர்வண்டார் பூங்குழல்வல்லி மருவிய பாம்புரநாதா, கருநிறமமைந்த காளகண்டேசா கவலையங் கடறனிலமிழ்ந்தி, வருந்துரா நாகலோகத்தோர் தொழுத வள்ளலே வாஞ்சை வைத்தருள்வாய், திருவளர்திருப்பாம் புரத்தொளிர் சிவனே செல்வமே கருணைவாரிதியே. (59)

## திருச்சிறுகுடி.

மறுவிலாமணியே மங்களநாதா மங்களநாயகி தலைவா, நறுமலரெடுத்துன் றிருவடிக்கணியு நலமிலே னலமுளோர் தம்மை, அறிந்தவர் பெருமை கனவிலு நினையே னப்பனே மனமகிழ்ந்தருள்வாய், சிறுகுடி யிற்செவ் வாய்தொழுபவனே செல்வமே கருணைவாரிதியே. (60)

## திருவீழிமிழலை.

முத்தமர் செந்தா மரைமலர் குறைய முகுந்தனோர் கண்ணிணையிடந்து, பத்தியினணியச் சக்கரமளித்த பரவுறுந் தலமெனவழங்கும், சுத்தமார் வீழி மிழலையின் வாழ்வே சுந்தரகுஜாம்பிகை தலைவா, சித்தனே வீழி நாதனே யருள்வாய் செல்வமே கருணைவாரிதியே. (61)

## திருவன்னியூர்.

காணரும்பொருளே சணுவிலாக்கரும்பே கண்கள்மூன்றுடையதோர்மணியே, பூணரும்பொருளே யக்கினீச்சுரனே பொருந்திய பார்வதிதலைவா, வேணியம்பிறையா யக்கினி வணங்கும் வேதனே வேண்டுவவருள்வாய், சேணுளோர் புகழும் வன்னியூரரசே செல்வமே கருணைவாரிதியே. (62)

## திருக்கருவிலி.

மறைபலபுகலுஞ் சற்குணநாதா மருவுசர்வாங்க நாயகியாள், உறைவலப் பாகாவுனதக மகிழ்ந்தே யூனுடலெடுத்த வென்றனக்குக், குறைதனையொழித்துப் பெருமையை யளிப்பாய் குரிசிலாஞ் சற்குணன் றொழுவோய், சிறைவிரித்தாடு மயிற்கருவிலிவாழ் செல்வமே கருணைவாரிதியே. (63)

## திருப்பேணுபெருந்துறை.

அலைகடலுடுத்த புவியுடலெடுத்தே யனுதினமனம் வருந்து றுமென், கலகமதொழித்தே முத்திவீடருள்வாய் கத்தனே சிவானந்தநாதா, மலையரசியையென் னன்னையைமணந்தாய் வருகிர கந்தொழுபவனே, சிலைவலா பேணுபெருந்துறைச் சிவனே செல்வமே கருணைவாரிதியே. (64)

## திருநரையூர்சித்தீச்சுரம்.

கற்பகத்தருவோ னருச்சனை புரிந்த கடவுளே சித்தநா தேசா, அற்புதா வழகாம் பிகைமணந் தவனே வையனே யடியனேற் கிரங்கி, நற்புதல்வரையும் நறும்பெரும் பொரு ளும் நல்லவா மனமுவந் தருள்வாய், சிற்பரா நரையூ ரானுஞ் சித்தீச்சுரத்துச் செல்வமே கருணைவா ரிதியே. (65)

## (அரிசிற்கரைப்புத்தூர்) (அழகாப்புத்தூர்)

இம்மையிலென்னையேழையாக் குவித்தா யெந்தையேயிது தவிர்த் திடுவாய், அம்மையே யரிசிற் கரைப்புத்தூ ரமுதே யருமழ காம்பிகை கணவா, எம்மையாண் டவனே யடியவற் கிரங்கி யெழிற படிக்காசளித் தவனே, செம்மையாம் படிக் கா சளித்தநாதேசா செல்வமே கருணைவா ரிதியே. (66)

## திருச்சிவபுரம்.

நெட்டிலைப் பசிய தெங்கின்முப் புடைக்காய் நிறைபொ ழிற் சிவபுரத் தமர்ந்த, கட்டிய சடையாய் பெரியநா யகிசேர் கடவுளே பிரமபுரீசா, விட்டொளிர் பொற்ரு மரையுறை விரிஞ்சன் விருப்புடன் பூசனை புரிந்த, சிட்டனே யென்னை யாண்டருள் புரிவாய் செல்வமே கருணைவா ரிதியே.

திருக்கலையநல்லூர், சாக்கோட்டை.

ஆவினுக் கொருபுல் வினையளித் தறியே னதிதிகட் கனம மைத் தறியேன், பூவினை வனைந்துன் றிருவடிக் கணியாப் பூரியே னாயினு மருள்வாய், மேவிய வமிர்த வல்லியின் மென் றோண் மேலணை யமிர்தகலேசா, தேவர்கோன் றொழுவோ ய் கலையநல்லூர்வாழ் செல்வமே கருணைவா ரிதியே. (68)

(திருக்கருக்குடி) (மருதாந்தநல்லூர்)

மூவிலைச் சூல மேந்திய வலத்தாய் முன்னவா கருக்குடி வாழ்வே, தேவர்தந் தேவே திருவருள் புரிவாய் சிபரா சற் குண நாதா, யாவருஞ் சர்வா லங்கிர்த மின்னும் பிகைதனை யணைந்தவ னென்னும், சேவுடையாய் சற்குணன் றொழுப வனே செல்வமே கருணைவாரிதியே. (69)

( திருவாஞ்சியம் )

சங்கின மாமை யலவனோ டிப்பி சாவிடை யூற்றினுற் புல ம்பி, மங்குலிற் குமிறும் வளத்த வாஞ்சியத்தில் வாழ வந்தா ளொடு சேர்ந்த, சங்கரா வொருபெண் விரும்பிய பொருளே தண்ணருள் புரிகுவாய் சிவனே, திங்கள்வாழ் சடையாய் வாஞ்சிலிங்கேசா செல்வமே கருணைவா ரிதியே. (70)

(நன்னிலத்துப்பெருங்கோயில்)

குடவளை யுயிர்த்த மணியின் நிலவாற் குவளைகண் மலருந் தண் வயலும், திடமுறுஞ் சோழன் செய்திருப் பணியுந் திகழ்தரு நன்னிலத் தெழுந்த, சுடரணிப் பிரகேச்சுரி புணர் பிரகேச் சுரவர மருள்புரி வரதா, செடிமலர்ச் செவிந்திப் பூந்தொடை யணிந்த செல்வமே கருணைவா ரிதியே. (71)

(திருக்கொண்டீச்சரம்)

கண்டவர் புகழ்கொண் டீச்சரத் தமர்ந்து காமதேன் னெருழுதிடும் பரனே, அண்டர்க ளுதிக்குஞ் சாந்தநா யகியை யழகுட னிடத்தினிலமைத்த, திண்டவெண் மதியாய் பசு பதி நாதா தூயநின் றிருவருள் புரிவாய், திண்டிறற் சூல மேந்திய சிவனே செல்வமே கருணைவா ரிதியே. (72)

(திருப்பனையூர்)

அந்தகற் றடிந்த சவுந்தர நாதா வப்பனே திருப்பனை யூர்வாழ், தந்தியை யுரித்த தனிப்பெரும் பொருளே தாணுவே பெரியநா யகிசேர், சுந்தரா முசுகுந் தன்முனந் தொழுத சோதியே நீயெனக் கருள்வாய் செந்திரு மாலும் பிரமனும் பரவுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (73)

(திருவிற்குடி வீரட்டானம்)

அட்டவீரட்டா வீரட்ட நாதா வப்பனே யேலவார் குழலி, இட்டனே திருவிற் குடியம ரரசே யெந்தையே சலந்தரா சூரன், மட்டிலாக் கருவந் தனையொழித் தவனை மாய்ந்திடச் செய்தமா மாமணியே செட்டிமா முருகன் றந்தையே யருள் வாய் செல்வமே கருணைவா ரிதியே. (74)

(திருப்புகலூர்)

அப்பரை யுட்கொண் டிமெருளரியே யருப்புக லூருறை யரசே, கப்பறை யமைந்த கையுடை யவனே காணரு மக்கி னீச் சுரனே, தப்பிலாக் கருந்தார் குழலியை மணந்த தனி விடை யூர்தியே தவிக்கும், செப்பரும் வறுமை யொழித்தரு ளெனக்குச் செல்வமே கருணைவா ரிதியே. (75)

(திருவர்த்தமானீச்சரம்)

வருக்கையி னறுந்தேன் பெருக்கெடுத் தோடும் வர்த்தமா
னீச்சரத் தரசே, உருக்கிளர் கருந்தார் குழலியை மணந்துள்
ளுவந்துவாழ் வர்த்தமானேசா, நரிக்குலம் பரியாக்கியுமவை
நரியாக்கியும் விளை யாடியநண்பா, திருக்கரு முகில்போற்
றிடுமவனேயாள் செல்வமே கருணைவா ரிதியே. (76)

(திருஇராமநதிச்சுரம்)

மழைமதர்நெடுங்க ணரிவையர் விழியில் மயங்கினேன் றிய
ங்குரு தருள்வாய், கழைமிகு மிராமநதீச்சரத் தமர்ந்த கட
வுளே யிராமலிங்கேசா, பிழையறுஞ் சரிவார் குழலியை
மணந்த பித்தனே யிராமன் பூசித்த, செழிநறு மிதழி செறிந்
தசெஞ் சடையாய் செல்வமேகருணைவா ரிதியே. (77)

(திருப்பயற்றூர்)

தம்மையே துதித்துப் புகழினுங் கீழோர் தம்பொரு ளுத
விலரானே, அம்மையங் காவியங்கணி மணந்த வன்பனே
நீ யெனக்கருள்வாய், அம்மனைதோறு மறுசுவை யளிக்கு
மரும்பயற் றூர்பயற்றீசா, செம்மையாம் பெரியரிஷி தொழு
பவனேசெல்வமே கருணைவா ரிதியே (78)

(திருச்செங்காட்டங்குடி)

மங்கல மோங்குஞ் சிறுத்தொண்ட ரளித்த மதலையின் கறி
யமுதுண்ட, திங்கள்வாழ் முடியாய் கணபதீச் சரனே திரு
க்குழ லுயைகிதலைவா, கங்குலைவிளக்கு மறுகுசூழ்ந் திமைக்குங்
கணபதீச்சுர த்தினிலமர்ந்த, செங்கண்மூன்றுடையா யெனக்
கருள் புரிவாய் செல்வமே கருணைவா ரிதியே. (79)

(திருமருகல்)

வணிகனுக் குற்று வளர்விட மொழித்த வளமிகு மருகலில் வாழும், மணியமர் காத்தாய் மாணிக்க வண்ண மருவிய வண்டுவார் குழலி, அணைதவா மார்க்கண் டேயர்பூசித்த வாரமுதே யெனக்கருள்வாய், திணிமிகுங் கைலை மலையுடையோனே செல்வமே கருணைவா ரிதியே. (08)

(திருச்சாத்தமங்கை)

கையின்மான் மழுவோய் வயவந்தி நாதா கரிசறுசாத்தமங் கையில்வாழ், மெய்யனே மலர்க்கண் ணம்மையை மணந்த மேலவா மேற்பத மருள்வாய், ஐயனே யஷ்டா வக்கிர முனிவர்க்கருள்புரி யருஞ்சுவை யமுதே, செய்யமேனியனே நீறணி பவனே செல்வமே கருணைவா ரிதியே. (81)

(திருநாகைக்காரோணம்)

வன்றொண்டர் பாட்டின் படியவர்க் கருள்செய் வள்ளலே யதிபத்தர் வணங்குங், கொன்றையஞ் சடையாய் புண்டரீக னையாட் கொண்டவா நாகைக்கா ரோண, மன்றில்வாழ் காயாரோகணேச் சுரனேமன்னுநீ லாயதாட்சியனே, தென்றிசையமன்வா சுகிதொழுவோய்கா செல்வமே கருணைவா ரிதியே (82)

(திருச்சிக்கல்)

முக்கணுவரனே வேனெடுங் கண்ணி முழுமணம் புரிமுதுமையனே, அக்கணி பவனே வெண்ணெலிங் கேசா யரியுமா வசிட்டமா முனியும், தக்கவிண் ணுலகின் றேனுவுந்தொழுத தாணுவே தண்ணருள்புரிவாய், திக்குடையோனே சிக்கல்வாழ் மணியே செல்வமே கருணைவா ரிதியே. (83).

(திருக்கீழ்வேளூர்)

பிறைநிகர் நுதலார் சுணங்கிடை படர்ந்து பெருத்திறு மாந்தமென் றனத்தின், நிறைமய லொழிய வெனக்குநீ யருள் வாய் நீள்வளம் நிமிர்ந்த கீழ்வேளூர், மறைபலபுகலும் வன முலையம்மை மணந்தவக்ஷய லிங்கநாதா, செறிபுகழாறுங் குறுமுனி வணங்குஞ் செல்வமே கருணைவா ரிதியே (84)

(திருத்தேவூர்)

உருவினிற் சிறந்த சுரர்குருவணங்கு முத்தமா வுலகினை யகட்டில், மருவினைத் தீன்ற மதுரபாஷணியை மலைதனிலு தித்த மங்கையினை, அரியினுக்கிளைய தங்கையை மணந்த வப்பனே யெனக்குநீயருள்வாய், திருவளர் தேவூர்தேவபுரீசா செல்வமே கருணைவா ரிதியே. (85)

(திருப்பள்ளியின்முக்கூடல்)

பள்ளியின் முக்கூ டலிலுறை பரமா பகவமுக் கோணநா தேசா, கிள்ளையின் மொழிமை மேவுகண் ணியினற் கேள் வனே கேட்டினால் வருந்தித், துள்ளுறு மெளியேற் கின்ன ருள் புரிவாய் தூயமா மதியணிந்தவனே, தெள்ளிய மார்க்க ரிஷிதொழுசிவனே செல்வமே கருணைவா ரிதியே. (86)

(திருவாரூர் மூலட்டானம்)

சூரவனுயுடலும்பொருளுமாவியையுங்கொண்டுமுத்தியை யெனக்கருள்வாய், பரதநூலுணர்ந்த பரத்தையர்மறுகு பல நிறைந் தமருமா ரூர்வாழ், பரவுமெய்ப் பரையா மல்லியங் கோதை பாகவன் மீகநாதேசா, சிரதார பரவை யூடறீர்த் தவனே செல்வமே கருணைவா ரிதியே. (87)

(திருவாரூர் அறநெறி)

அரும்பொனே புவனேச் சுரிமகிழமுதே யறநெறி வாழகி லேசா, பெரும்புகழுருவே பித்தனே பிறைவேய் பேயனே யெளியேனிதமும், வருந்துறு திரங்கி வாழ்வினை யளிப்பாய் வள்ளலே வார்சடை முடியாய்; திருந்தியமார்க்கண் டேயர் பூசித்த செல்வமே கருணைவா ரிதியே. (88)

{ திருப்பரவையுண்மண்டளி
அரவாநயினார்கோயில் }

பரவையுண்மண்ட ளீச்சுர தேவா பஞ்சின்மெல் லடியும் மைபகா, அரகராதிருவா ரூர்ப்பரவையுண்மண் டளியுறை யானந்தவாழ்வே, பரவையார்க்கிரங்குஞ்சுந்தரர்க்கொருகண் பரிந்தருள் பரமனேயென்றன், சிரம நீ யொழித்துச் சிறந்த வீடருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (8: )

(திருவிளமர்)

மாங்குயிற்கூவுஞ் சோலைசூழ்விளமர் மருவியயாழின்மென் மொழியாள், பாங்குறும்பாக பதஞ்சலிவணங்கும் பதஞ்சலி மனோகரகங்கை, தாங்குறுசடையாய் தனிமன்ற முடியாய் தாணுவே யெனக்கருள் புரிவாய், தேங்கமழ் கடுக்கை தாங் கிய தோளாய் செல்வமே கருணைவா ரிதியே (90)

(திருக்கரவீரம்)

அருக்கனுமதியு மழலுமுக் கண்ணு வமைத்தருட் கரவீர நாதா, மருக்கமழ்துழற் பிரத் தியக்ஷமின்னும்பாள் மருங்கி னிற் கொண்டமா மணியே, கரித்துவக் கணிந்த கௌதம முனிபூ சித்திடுங் கற்பகக் கனியே, தெருக்களிற் சிறந்த திருக்கவீரச்செல்வமே கருணைவா ரிதியே. (91)

(திருப்பெருவேளூர் ஐயம்பேட்டை)

பூக்கமழ்சோலை சூழ்பெருவேளூர்ப் புராதன மின்னனை யாளை, நீக்கரும் புகழ்ப்பிரி யாதநாதேசா நிறைவளக் கோச் செங்கட் சோழன், வாக்கினால் வழுத்திப் பணிபுரி தளிவாழ் வள்ளலே வெள்விடைக்கொடியாய், திக்குணமுடைவே னுயினுமருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (92)

(திருத்தலையாலங்காடு)

நிகழ்திருமடந்தை யம்மையைமணந்த நின்மலா வாடவல் லவனே, இகழ்விலாப்பெரிய முயலகன்முதுகி லிணையடி படநடித்தவனே, புகழெனக் கருள்வாய்ப் பெண்குழற்புகை போய் பொன்னுலகின் மணங்கமழுந், திகழ்தலையாலங் காடு றை யரனேசெல்வமே கருணைவா ரிதியே. (93)

(திருக்குடவாயில்)

துன்னுறுந்திரண பிந்துமா முனிவர் தொழவவர் நோய்த விர்த்தவனே, இன்னிசைநிறைந்த பொழிற்குடவாயிலீசனே யிமவரைபயந்த, நன்னுதற் பெரிய நாயகிதலைவா நாதகோ ணேச்சுரமூர்த்தி, சென்னியம் பிறையாய்பவமறுத்தாள்வாய் செல்வமே கருணைவாய் ரிதியே. (94)

(திருச்சேறை)

கூறரும் பெரிய தௌமியமுனிகும் பிட வவற்கருளு மெண்குணனே, ஏறியவறியேன் மாறியமனத்தே னெந்தை யே யிதுதவிர்த் தாள்வாய், சீறியமகிடா சுரனுடற்றுலைத்த செல்வியை ஞானவல்லியைச்சேர், சேறையில் வாழுஞ்சென் னெறி நாதா செல்வமே கருணைவா ரிதியே. (95)

திருநாலூர் மயானம்.

அம்பொனேயாபத்தம்பர்பூசித்த வப்பனேயரிவையருடல், வெம்பதச்சூட்டுப் புயமலையுடையார் மேவுநா லூர் மயானத் தில், வம்பவிழ்குழற்பெரி யாம்பிகைமணந்த வள்ளலே பலா வனே ச்சுரனே, செம்புலித்தோலினுடையனே யருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (96)

திருக்கடுவாய்க்கரைப்புத்தூர் ஆண்டாங்கோவில்.

அத்தனே கடுவாய்க் கரைப்புத்தூ ரரசே யப்பனே சிவாம் பிகை மணந்த, முத்தனே முதல்வா சொர்னபுரீசா முக்கணு மூவுலகளந்தோன், பத்தியோ டேத்தும் பராபரப்பொருளே பகர்பெருங் காசிபர் வணங்குந், தித்திக்குந்தேனே யெளியே னேற் கருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (97)

திருவிரும்பூளை, ஆலங்குடி.

மருமலர்ச்சோலை சூழிரும்பூளை மன்னி வாழபத் சகாயா, பெருமையார் காசியாரண்யேச் சுரனே பித்தனே யேல வார்குழலி, உரியனேவிசுவாமித்திரர் மிகவு முவந்துபூசித்திடு மரனே, திருவுநற்சிரு முத்தியுமருள்வாய் செல்வமே கருணை வாரிதியே. (98)

{ திருவரிதைப்பெரும்பாழி, அரித்துவாரமங்கலம். }

புயனிறத் தரியும் பிரமனுஞ் சபதம் புகன்றுமண் விண்ணி டைப் புகுத, நயமிகு மரித்து வாரமங்கலம் வாழ் நாதனே

வணிகனை யாண்டாய், வயமிகுவலப்பா கந்தனிலமர்ந்து வாழலங் காரவல்லியனே, செயசெயபாதா ளேச்சுர வருள் வாய் செல்வமே கருணைவா ரிதியே. (99)

திருவவளிவணல்லூர்.

குவளைவேல் விழியாட் கிரங்கியே சாக்ஷி குருக்களுக் குரைத்திடுங் கோவே, பவ்ளவா யிளநல்லார்மண மறுகின் புல்லியத் தொலியெங்கு நீங்கா, அவளிவணல்லூர் சாக்ஷிநா யகனே யப்பனேசௌந்தர நாயகிசேர், திவ்வொளி நீற்றாய் வேண்டுவ வருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (100)

(திருப்பரிதிநியமம்)

பகாருமங்க ளாம்பிகை மணந்த பருதியப்பா ரெனும் பர னே, நிகாரும்பருதி நியமமே குடியா நிலைத்துவாழ் நின் மலா சிவனே, பகலவன்றொழுது வணங்கிட வவற்குப் பரி சினை யுவந்தளித் தவனே, சிகரமாலிகையோய் வேண்டு வருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (101)

(திருவெண்ணியூர்) (கோவில்வெண்ணி)

எண்ணரும் புகழசேர் வெண்ணியூ ரரசே யேந்தலே வெ ண்ணிநா தேசா, அண்ணலே யணுவு மண்டமுமீன்ற வழ கிய நாயகி தலைவா, புண்ணியத் தெத்தாத்திரி முனிதொழுத பூரணவடியனேற் கருள்வாய், திண்ணியமலை யைத் தனுவெ னக் குனித்த செல்வமே கருணைவா ரிதியே. (102)

(திருப்பூவனூர்)

பூவனூருறையும் புஷ்பவனேசா பூரண கற்பகவல்லி, மேவிவாழ்வாழ்வே மேலுலகேத்தும் மெய்யனே யெனக்குநீ யருள்வாய், காவலன்புதல்வி தோல்வியையடையக் கடி மணம்புரிந்த காதலனே, தேவர்கட்கரிய தேவனே யழியாச் செல்வமே கருணைவா ரிதியே. (103)

(திருப்பாதாளீச்சுரம்) (பாமணி)

பண்ணரும் பூசை செய்தடி பணிந்த பகரரு நாக லோகத்தார்க், கெண்ணிய வரங்களீந்து முற்காத்த விறை வனே யெளியனேற்கருள்வாய், அண்ணலே நாகநாதனே சிவனே யமிர்தநாயகிக்கு நாயகனே, திண்ணிய பாதளேச்சு ரத்தமர்ந்தோய் செல்வமே கருணைவா ரிதியே (104)

(திருக்களர்)

சீர்த்துருவாச மாமுனிநடன தரிசனஞ் செய்ததி லுறை யும், பேர்த்திருவருவார ாலயந் தனில்வாழ் பித்தனே களர் முளைநாதா, ஏர்ப்புகழழகேச் சுரிபுகழிறைவா வேந்தலே யெனக்கருள் புரிவாய், தேர்த்திகழ் வீதித்திருக்களர் வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (105)

(திருச்சிற்றேமம்) (சிற்ரும்பூர்)

நீரமர் சடையாய் பொன்வைத்த நாதா நிறையகி லாண்ட வல்லியனே, பேரமர்பொற்கா சினைவிபுசனுக்குப் பிறங்கு றும் படியளித் தவனே, கூரமர்மழுவின் படையுடையவனே கொடியனே னுயினுமருள்வாய், சீரமர்சிற்றே மத்தலத்தர சே செல்வமே கருணைவா ரிதியே. (106)

(திருவுசாத்தானம் கோவிலூர்)

பால்தயிர் நறுந்தேன் பழஞ்சருக் கரைநெய் பண்ணரும் நிவேதன மமைத்துக், கோலமா ரிராமன் பூசனைபுரிந்த குழகனே யெனக்கரு ளளிப்பாய், சீலனே பெரிய நாயகிதலைவா சிறப்புறு மந்திர புரீசா, சேலுலாம் பண்ணை சூழுசாத்தானச் செல்வமே கருணைவா ரிதியே. (107)

(திருஇடும்பாவனம்)

மருவளரிதழி தவழ்பிறை முடித்தோய் மங்கள நாயகிதலைவா, உருவள ரமுதே சற்குணநாதா வுன்றிரு வடிநிழ லருள்வாய், அருவளரிடும்பன் பூசனைபுரிய வவற்கருள் புரிந்தவற்புதனே, திருவளரிடும்பா வனமுறைதேனே செல்வமே கருணைவா ரிதியே. (108)

(திருக்கடிக்குளம் கற்பகநாதர்கோவில்)

இறைவனே சௌந்தர நாயகி தலைவா வீசனே கற்பகநாதா, குறைகழற் பெரிய கற்பகப் பிள்ளை யாற் சொரு மாங்கனி கொடுத்த, மறைமுடி யமரும் மாசிலா மணியே மனமகிழ்ந் தெனக்குநீ யருள்வாய், செறிவளம் நிறைந்த கடிக்குளத்தமர்ந்த செல்வமே கருணைவா ரிதியே. (109)

(திருத்தண்டலைநீணெறி)

அங்கட லாமை கலக்கிட வந்த வாமையோ டணிந்தும்பர், தங்களையாண்ட தாணுவே தழைத்த தண்டலை னீணெறி

யமரும், திங்கமான் மழுவாய் நீணெறிநாதா தாயனாளும் பிகை மணந்த, செங்கண்மால் விடையா வென்னையாண் டருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (110)

(திருக்கோட்டூர்)

பூட்டிய பணியா பரம்பைமுன் னெழுது புகழ்சிவக் கொழுந்துநா தேசா, நாட்டமூன் றுடையாய் மதுர பாஷணியை நன்மணம் புரிந்தநா யகனே, கேட்டிலேனயடையா தெனக்கருள் புரிவாய் கிளர்மணிக் கழைகள் விண்ணுலவிச், சேட்டொடும் பெருங்கோட் டூருறைதேவே செல்வமே கருணைவா ரிதியே. (111)

(திருவெண்டுறை)

வண்டிசை முழங்குந் தளியில்வா ழுமுதே வள்ளலே வாழ்வெனக் கருள்வாய், துண்டவெண் மதியாய்த் தோடணிசெவியாய்த் துவர்சடை படர்சிவக் கொழுந்தே, வெண்டுறை வாழும் வெண்டுறை நாதா வேனெடுங் கண்ணியை மணந்து, தெண்டிரைக் கங்கை தனும்பநின் றுடுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (112)

(திருக்கொள்ளம்பூதூர்) (திருக்களம்பூர்)

பாலரு வாயார் பாடலுக் கிரங்கி பரிசினைப் பரிந்தருள் பரமா, கோலனே சௌந்தர நாயகி கொஞ்சுங் கொற்றவா

வில்வவனேசா, சூலமார் கரத்தாய் சூழ்வினைக் கடலிற் ருெண்டனேன் ருேய்ந்திடா தருள்வாய், சேலுலாம் பணைசூழ் திருக்கொள்ளம் பூதூர்ச் செல்வமே கருணை வாரிதியே (113)

(திருப்பேணை) (ஓகைப்பேணை)

பொருவருஞ் சகலபுவனநா யகனே புகழ்பெறு மேகலாம் பாளை, அருகினிலமைத்த வம்பொனே வருணன் னருச்சனை புரிந்திடு மமுதே, உருகிநா னனலிற் காட்டிய மெழுகின் னுருவெனக் கரைந்திடலழகோ, தெருவினிற் சிறந்த பேரெயி லுறையுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (114)

(திருக்கொள்ளிக்காடு)

ஒளிமிகுங் கொள்ளிக் காடுறை யரசே யோங்கிய வக்கினீச் சுவரனே, களிமிகுஞ் சுமந்து ரிஷிதொழும் பொருளே கருதுறும் பொருளெனக் கருள்வாய், அளிமிகுங் கனியே பஞ்சின்மெல் லடியா ளணைந்தவிண் புயப்பெருமானே, தெளிமிகும் பாகே சீனியே தேனே செல்வமே கருணைவா ரிதியே. (115)

(திருத்தெங்கூர்)

அருமரி கரபுத் திர்தமக் கருளு மப்பனே யுனைத்தொழு தறியேன், எருமையூ ரரசனெனை வருத்திடில்யா னென்செய்வே னையநீ யருள்வாய், இருவெள்ளி மலைநா தீசனே பெரிய நாயகி யிணைந்து வாழரசே, திருவளர் தெங்கூர்த் திரவியமே யென் செல்வமே கருணைவா ரிதியே. (116)

( திருநெல்விக்கா. )

அல்லரும் பகலு மல்லலங் கடவி லலமரு மடியனேற் கருள்வாய், சொல்லரு மங்க ளாம்பிகை மணந்த சோதியே நெல்லிவனேசா, வல்லனே தாருகாவன முனிக்கு மகிழ்ந்தருள் புரிந்த சங்கரனே, செல்லரும் பொழில்சூழ் நெல்லிக்கா வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (117)

(திருநாட்டியத்தான்குடி.)

தோடணி செவியாய் மலைமங்கை வாழுந் தோன்றலே யிரத்னகிரீசா, நாடரும் வளஞ்சூழ்ந் தோங்கிடும் புகழ்சேர் நாட்டியத் தான்குடி வாழ்வே, பீடுயர் யானை பூசனைபுரிந்த பித்தனே யெனக்கருள் புரிவாய், தேடருமாலும் பிரமனுங் காணாச் செல்வமே கருணைவா ரிதியே. (118)

( திருக்காராயில். )

கொன்றையஞ் சடையா யிந்திரன் வணங்குங் கோதிலாக் கற்பகக் கொழுந்தே, கன்றமர் கரக்கை லாசநா யகியைக் கருது கண்ணுயிர நாதா, துன்றுறு வளஞ்சேர்ந் தோங்கு காராயிற் சோதியே தூநறுமணியே, தென்றிசைக் கோன்வே னைதவிர்த்தாள்வாய் செல்வமே கருணைவா ரிதியே (119)

( திருக்கன்றாய்ப்பூர். )

ஒருமகட் கருளும் நடுதறி நாதா வொப்பிலாப் பெரியநா யகிசேர், கருமணி மிடற்றாய் கழனிசூழ் கன்றாய்ப் பூரமர் கற்பகக்காவே, மருவளரிதழி மணந்தசெஞ் சடையாய் மனத்தெழுங் கவலையைத் தொலைத்துத், திருவுளமிரங்கி யேழையேற் கருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (120)

(திருவலிவலம்.)

தொழுங்கருக் குருவிக் கருள்பரம் பொருளே சோதியே துகளறு மணியே, அழலிடுமெழுகின் பாவையைப் போல்யா னப்பனே வருந்தி மாழ்குவனே, பிழைபொறுத் தாள்வாய் மாழையங்கணியாள் பிரியனே மனத் துணைநாதா, செழிவள மிகுந்த வலிவலமெழுந்த செல்வமேகருணைவாரிதியே. (121)

(திருக்கச்சினம்.)

கச்சினத் தமருங் கச்சின நாதா காணருந் திரபிந்து முனிவர், இச்சைவைத்தேத்தும் வெள்வளையம்மை யின்பினுக் கிசைந்தநற் றலைவா, நச்சணிமிடற்றாய் மதியணிவேணி நண்பனே யெனக்கருள் புரிவாய், செச்சை மேனியனே சிவநமச் சிவாய செல்வமே கருணைவா ரிதியே. (122)

(திருக்கோளிலி.)

மதித்துவன் றொண்டர் பொருட்டரும் பரவை மனைதனி னெல்லளித் தவனே, பொதியவிழ் மலராற் சிறப்புறு பொழில்சூழ் பொற்பினால் மிகுதிருக் குவளைப், பதியில் வண்டார் பூங் குழலியை மணந்த பண்பனே கோளிலி யப்பா, திதி விதிமாலுக் கருள்செயும் பொருளே செல்வமே கருணைவா ரிதியே. (123)

(திருவாய்மூர்.)

பண்ணவர் புகழ்வீணையினொலி யாலும் பல்லியத் தின்னொலி யாலும், நண்ணு தோ ரணத்தாற் பொலிமறுகாலும் நகுபுகழுடைய வாய்மூர்வாழ், எண்ணுபா லினுநன் மொழி யுமைமருவு மின்பவாய் மூரனாதேசா, திண்ணிய வாயு தொழுபவ னேயாள் செல்வமே கருணைவா ரிதியே. (124)

(திருமறைக்காடு.)

பத்தரின் மணிக டிரைக்கரத் தேந்திப் பாயொலித் துதி யொடு முன்னீர், எத்தினமுங்கொண் டிறைஞ்சிடு மறைக் காட் டிணையில்யா ழைப்பழித் தவள்சேர், முத்தனே மறைக் காட் டீசவீசான மூர்த்தியே மறைதொழு பவனே, சித்தியாம் முத்திவீடருள் வாய்நீ செல்வமே கருணைவா ரிதியே. (125)

(திருவகத்தியான்பள்ளி.)

புகழ்ப்பெறு மளவில் வேதவாக் கியங்கள் புகன்ற செவ் வாய்மல ரதனுல், இகழ்ப்பெறுவினது பாசவேரறுப்பா மென ப்புகன் றிடுவதோர் பெரிதோ, அகத்தியான் பள்ளி வாழகத் தீசா வகத்தியன் ருெழும் பரம்பொருளே, செகத்தனை மங்க ளாம்பிகைபாகா செல்வமே கருணைவா ரிதியே. (126)

(திருக்கோடிக்குழகர், குழவர் கோவில்.)

மருவிய மையார் தடங்கணி மணந்த மாசிலா வமிர்தகடே சா, அரியமால் பிரம னண்டரிந்திரரு மருச்சனை புரிந்திடு மமு தே, புரிசடை மருங்கி விளம்பிறை தவழும் புண்ணியா வே ழையேற் கருள்வாய், திருவளர் திருக்கோடிக் குழகத்தாய் செல்வமே கருணைவா ரிதியே. (127)

காவிரியின் தென்கரை ஸ்தலங்கள் 127.

ஷை வடகரையின் ஸ்தலங்கள் 63.

ஆ சோழநாட்டு ஸ்தலங்கள் 190

முற்றும்.

## ஈழநாடு.

### திருக்கோணமாமலை.

கோணமா மலைக்கண் மாதுமை யொடும்வாழ் கோணநா தேச்சர கங்கை, வேணியா வறுமை வேலையைக் கடத்தி விளங்குறும் பொருளெனக் கருள்வாய், பாணியின் மழுவா விந்திர னசுரர் பரவிநின் றடிதொழும் பரனே, சேணுளோர் புகழுஞ் செங்கரும் பேயென் செல்வமே கருணைவா ரிதி யே. (191)

### திருக்கேதீச்சுரம்.

கண்ணுதற் பொருளே கவுரியின் றலைவா கருதுகே தீச்சுர நாதா, எண்ணியபுகழுஞ் செல்வமு மகவு மீந்துபி னின்பவீ டருள்வாய், புண்ணியப் பிருகு மாலிய வானும் பூசனை புரிந் திடும் பரனே, திண்ணிய புகழ்க்கே தீசசுரம் வாழுஞ் செல்வ மே கருணைவா ரிதியே. (192)

ஈழநாட்டுஸ்தலம் (2) முற்றும்.

## பாண்டிநாடு.

### (திருவாலவாய் மதுரை)

இமையவர்க்கரசன் பழியொழித்தருள விதுமுத லறுபத்து நான்கா, யமைதிரு விளையாட் டியற்று தென்மதுரை யமர் ந்துவாழ் சோமசுந் தரனே, கமைதருமுள்ளத் தங்கயற் கண்ணி கடிமணம் புரிந்தகா தலனே, சிமையவில் லோனே யென்னையாண் டருள்வாய் செல்வமே கருணைவா ரிதி யே. (193)

## திருஆப்பனூர்.

ஆப்பனூர் வாழு மம்பிகை கணவா வாப்பனூரப்பனே யரையன், காப்புடை யமைச்சற் காயெழுந் தாப்பிற் காட்சி தந் தருளுமா மருந்தே, கூப்புறு கரத்தோ டுனைத்தொழு தறியேன் கூறரும் வறுமையு மொழித்துத், தீப்பிணி தனையு மொழித்தருள் புரிவாய் செல்வமே கருணைவாரிதியே. (194)

## திருப்பரங்குன்றம்.

கரியுரி வனைந்த பரங்கிரி நாதா காணரு மாவுடை யம்மை, ஒருமருங்குடையாய் தெய்வயானையைமுன் புயர்மணங் குமரவேள் புரிந்த, பெருமலை யெனுஞ்சீர்ப் பரங்குன்ற மமரும் பொருளேயெனை யாள்வாய், திருமறைப் பொருளே யானந்த வாழ்வே செல்வமே கருணைவா ரிதியே. (195)

## திருவேடகம்.

எடெதிர்த் தோடித் தோன்றிய திருவே டகத்துறை யேடக நாதா, வீடரு ளுமாதே வியைமணந் தவனே வேண்டிய வாமெனக் கருள்வாய், தோடணி செவியா யோடணி கரத்தாய் தும்பைமா மலர்வனை சடையாய், தேடருமாலும் பிரமனுந் தேடுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (196)

## (திருக்கொடுங்குன்றம் பிரான்மலை)

அருங்குயி லமுத நாயகி தலைவா வண்டர்கோன் றொழுதிடும் வாழ்வே, மருவள ரிதழி மருவிய முடியாய் மாசிலாப் பதனிழ லருள்வாய், கருவிழி மடவார் பாடலோடாடுங் கவின்றிகழ் கொடுங்குன்ற மமர்ந்த, திருவளர் கொடுங்குன் றேச்சுரநாதா செல்வமே கருணைவா ரிதியே. (197)

## ஈழநாடு.

### திருக்கோணமாமலை.

கோணமா மலைக்கண் மாதுமை யொடும்வாழ் கோணநா தேச்சுர கங்கை, வேணியா வறுமை வேலையைக் கடத்தி விளங்குறும் பொருளெனக் கருள்வாய், பாணியின் மழுவா விந்திர னசுரர் பரவிநின் றடிதொழும் பரனே, சேணுளோர் புகழுஞ் செங்கரும் பேயென் செல்வமே கருணைவா ரிதி யே. (191)

### திருக்கேதீச்சுரம்.

கண்ணுதற் பொருளே கவுரியின் றலைவா கருதுகே தீச்சுர நாதா, எண்ணியபுகழுஞ் செல்வமு மகவு மீந்துபி னின்பவீ டருள்வாய், புண்ணியப் பிருகு மாலிய வானும் பூசனை புரிந் திடும் பரனே, திண்ணிய புகழ்க்கே தீச்சுரம் வாழுஞ் செல்வ மே கருணைவா ரிதியே. (192)

ஈழநாட்டுஸ்தலம் (2) முற்றும்.

## பாண்டிநாடு.

### (திருவாலவாய் மதுரை)

இமையவர்க்கரசன் பழியொழித்தருள வீதுமுத லறுபத்து நான்கா, யமைதிரு விளையாட் டியற்று தென்மதுரை யமர் ந்துவாழ் சோமசுந் தரனே, கமைதருமுள்ளத் தங்கயற் கண்ணி கடிமணம் புரிந்தகா தலனே, சிமையவில் லோனே யென்னையாண் டருள்வாய் செல்வமே கருணைவா ரிதி யே. (193)

## திருஆப்பனூர்.

ஆப்பனூர் வாழு மம்பிகை கணவா வாப்பனூரப்பனே யரையன், காப்புடை யமைச்சற் காயெழுந் தாப்பிற் காட்சி தந் தருளுமா மருந்தே, கூப்புறு கரத்தோ டுனைத்தொழு தறியேன் கூறரும் வறுமையு மொழித்துத், தீப்பிணி தனையு மொழித்தருள் புரிவாய் செல்வமே கருணைவாரிதியே. (194)

## திருப்பரங்குன்றம்.

கரியுரி வனைந்த பரங்கிரி நாதா காணரு மாவுடை யம்மை, ஒருமருங்குடையாய் தெய்வயானையைமுன் புயர்மணங் குமரவேள் புரிந்த, பெருமலை யெனுஞ்சீர்ப் பரங்குன்ற மமரும் பேரரு ளேயெனை யாள்வாய், திருமறைப் பொருளே யானந்த வாழ்வே செல்வமே கருணைவா ரிதியே. (195)

## திருவேடகம்.

ஏடெதிர்த் தோடித் தோன்றிய திருவே டகத்துறை யேடக நாதா, வீடரு ளுமாதே வியைமணந் தவனே வேண்டிய வாமெனக் கருள்வாய், தோடணி செவியா யோடணி கரத் தாய் தும்பைமா மலர்வனை சடையாய், தேடருமாலும் பிரம னுந் தேடுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (196)

## (திருக்கொடுங்குன்றம் பிரான்மலை)

அருங்குயி லமுத நாயகி தலைவா வண்டர்கோன் றொழுதிடும் வாழ்வே, மருவள ரிதழி மருவிய முடியாய் மாசிலாப் பதனிழ லருள்வாய், கருவிழி மடவார் பாடலோடாடுங் கவின்றிகழ் கொடுங்குன்ற மமர்ந்த, திருவளர் கொடுங்குன் றேச்சுரநாதா செல்வமே கருணைவா ரிதியே. (197)

## திருப்புத்தூர்.

இரும்பெனு மனத்தே னுனைத்தொழு தறியே னெந்தையே யீசனே யமுதே, அரும்பெனு முறுவ லெழிற்சிவ காமி யன்பனே யடியனேற் கருள்வாய், அரிப்புத்தேள் பிரம னிந்திரன் முதலோ ரருச்சனை புரிந்திடு மரசே, திருப்புத்தூர்ப் புத்தூ ரீசனே சிவனே செல்வமே கருணைவா ரிதியே. (198)

## திருப்புனவாயில்.

காய்கனி நுகர்ந்து கானிடை வதிந்து கதிதனை மனநினி னினையாப், பேயனே னெனினு மெனக்கருள் புரிவாய் பித்தனே பழம்பதி நாதா, வாயினு நான்கு வேதங்கள் வழுத்தும் வள்ளலே கருணைநா யகியாய், சேய்மலர்த் தடஞ்சூழ் திருப்புனவாயிற் செல்வமே கருணைவா ரிதியே. (199)

## திருவிராமேச்சுரம்.

நிறம்பெரு மிராம னிருகணீர் மல்க நிறைமலர் சொரிந்தருச் சித்துப், புறம்பிலா மனத்தோ டடிதொழுதேத்தப் புகலரும் பழிதொலைத்தவனே, அறம்பயில் ராமேச் சுரமமரரனே யரும்பரு வதவருத் தனிசேர், திறம்பயில் ராம லிங்கமே யருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (200)

## திருஆடானை.

ஆடுபூ சித்தவா டானைநா தேசா வப்பவா டானையி லமர்ந்து, வீடருளன்பா யிரவல்லி மணந்த வேந்தனே வேண்டுவ வருள்வாய், தோடணி யழகா தொன்மறை தொழுமென் றேன்றலே துலங்குசெஞ் சடையாய், தேடரும் பொருளே சங்கரா சம்போ செல்வமே கருணைவா ரிதியே. (201)

திருக்கானப்பேர்.

கானப்பே ரென்னுங் கானையார் கோவிற் கருதிவாழ் கானை யப் பாரே, வானவர் புகழ்வன் றொண்டரை யெதிர்சென் றழைத்திடும் வள்ளலே வறுமை, மேனிக ழேனை கடைக்க ணித் தருள்வாய் மிகமக மாயிதன் றலைவா, தேன்வழிந் தொழு குந் தெரியலார் புயத்துச் செல்வமேகருணைவாரிதியே. (202)

திருப்பூவணம்.

பெருவரால் வெடிபோய்த் தெங்கிற்றூழ் குலையும் பேரிளங் கமுகின்மென் குலையும், கரையுதிர்த் தல்லிக் கமலமீ தறங் குங் கழனிசூழ் பூவணத்துறையும், கருவிளை நெடுங்கண் மின்னம்மை பாகா கடவுளே பூவண நாதா, திருவளர் கணிகை முத்தங்கொள் குறியார் செல்வமே கருணைவா ரிதியே. (203)

(திருச்சுழியல்.)

பகருஞ் சுழியல் வாழ்துணை மாலை நாயகி பாகனேபரவும், நிகரரும் பெரிய திருமேனி நாதா நித்தனே யெனக்கருள் புரிவாய், அகமகிழ்ந் தம்மை திருமணம் புரிய வருந்தவஞ் செய்திட வணங்தோய், கிரியைத் திருமாற் கருடிகம் பரனே செல்வமே கருணைவா ரிதியே. (204)

(திருக்குற்றாலம்.)

தூவளர் பொதிகை மாமுனி வாழ்த்துந் தோன்றலே சண் பகா டவியாம், தாவில்குற் றாலக் குறும்பலா நாதா தண் குழல் வாய்மொழி தலைவா, ஆவினைந் தினைச்சேர்த் தணுவள வேனு மனுதின மஞ்சன மாட்டாத், தீவினை யுடையே னுயினு மருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (205)

(திருநெல்வேலி.)

வேதசர் மாவின் பொருட்டுநெற் றிரட்கு வேலியைக் கட்டியின் னருள்செய், கோதறுந் திருநெல் வேலியில் வாழுங் குரிசிலே வேணுவிங் கேசா, நாதனே காந்தி மதி யிடங் கொண்ட நண்பனே யெனக்கருள் புரிவாய், சீதமார் மதியோ டொருதழும் புங்கொள் செல்வமே கருணைவா ரிதியே. (206)

பாண்டியநாடு முற்றும்.

சேரநாடு, மலைநாடு.

திருவஞ்சைக்களம்.

சகம்புகழ் பரசு ராமனுக் கிரங்கித் தாய்க்கொலை தனைமிக வொழித்தே, நகர்மிகுந் திருவஞ்சைக் களங்குடிகொ ணறு நுத லுமைமண வாளா, அகமகிழ்ந் தாண்ட வப்பனே மணியே யையனே யெனக்கருள் புரிவாய், திகழ்திரு வஞ்சைக் களத்தனே தேனே செல்வமே கருணைவா ரிதியே.

சேரநாடு முற்றும்.

கொங்குநாடு, திருஅவிநாசி.

நேர்பெருங் கருணை நாயகி தலைவா நிகழவி நாசியீச்சரனே, பார்பெறும் பதத்தை யெனக்கருள் புரிவாய் பகரவி நாசியி னரசே, கார்பெறு முதலை யுண்டபா லனையே காசினி வந் திடப் பாடும், சீர்பெறும் பாடல் கேட்டுவந் தவனே செல்வமே கருணைவா ரிதியே. (208)

திருமுருகன் பூண்டி.

சிவவடி வடைந்த பூதம்வே டுருவாய்ச் செறிவளம் நிறை ந்த சுந்தரர்தம், நவநிதிமுழுதும் பறித்துவந் திடவும் நாட்டம் வைத் தவற்கதைடளித்தும், புவிவிளை யாண்ட முருகன்பூண் டியனே புகழ்மிகு முருகநா தேசா, திவளிழை முயங்கு பூண் முலை யம்மை செல்வமே கருணைவாரிதியே. (209)

திருநணா.

கருமணி சொழிக்குங் காவிரி யடியார் கருதுறும் பவானி யென் றுரைக்கும், இருநதி சேர்ந்த திருநணா வாழு மிணையி லாச் சங்கமேச்சுரனே, உருவளர் வேதாம் பிகையுமை மண ந்த வுத்தமா வுன்பத மருள்வாய், திருவளர் தனதன் பூசனை புரிந்த செல்வமே கருணைவா ரிதியே. (210)

{ திருச்செங்குன்றூர். }
{ திருச்செங்கோடு. }

பிருங்குமா விருடி தொழுதசெங் குன்றூர்ப் பித்தனே யர்த்தநா ரீசா, மருங்குறை யர்த்த நாரியை மணந்த மன்னவா மழுவலப் பாகா, கருங்கலு மிரும்பும் பழித்தவன் மனத்துக் கசடனே னெனினு நீ யிரங்கித், திருந்திய வின்ப மெனக் கருள் புரிவாய் செல்வமே கருணைவா ரிதியே. (211)

திருவெஞ்சமாக்கூடல்.

வெஞ்சமாக் கூடல் வாழ்ந்திடு மழுதே விகிர்தநா யகிவலப் பாகா, நஞ்சணிமிடற்றுய் விகிர்தநா தேசா நாற்றிசை தொழுதிடு மீசா, வெஞ்சனென் னசுரற் கருள் புரிந்தவனே வேண்டுநின் னடியிணை யருள்வாய், செஞ்சிர மதனிற் சிர முடை யோனே செல்வமே கருணைவா ரிதியே. (212)

## திருப்பாண்டிக்கொடுமுடி.

வண்ணமால் வணங்குங் கொடுமுடி நாதா வள்ளலே பண்மொழி யம்மை, நண்ணிவா ழரனே யெண்ணிய வருள்வாய் நனியெழின் மடந்தையர் சிதறுஞ், சுண்ணமும் பனிநீர்த் திவலையு மயங்கிச் சூழ்ந்திடு மணிமறு குடுத்த, திண்ணிய புகழ்சேர் கொடுமுடி வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (213)

## திருக்கருவூர்.

செப்பருங் காமதேனுபூ சித்துச் சிருட்டியை யாற்றிய தலமாம், ஒப்பருங் கருவூர்ப் பசுபதிச் சுரனே வுவந்துகாத் தாண்டருள் புரியென், அப்பனே கிருபா நாயகி தலைவா வருமறை முடிவைநால் வருக்குஞ், செப்பிய முக்கட் சிவபெருமானே செல்வமே கருணைவா ரிதியே. (214)

## கொங்குநாடு முற்றிற்று.

## மகதநாடு, நடுநாடு, திருஅரத்துறை.

அரத்துறை வாழு மரத்துறை நாதா வானந்த நாயகி தலைவா, தரித்திர மென்னிற் றரித்திடா தருள்வாய் தனிப்பெருங் கவுணியர் தமக்குப், பெருத்திரு முத்துப் பந்தரீந் தவனே பித்தனே யத்தனே பிரானே, திருக்கைலாச வாசனே சிவனே செல்வமே கருணைவா ரிதியே. (215)

## திருத்தூங்கானைமாடம்.

இசைமறை முடிவாழ் சுடர்கொழுந் தீசா வினையிலாக் கடந்தைநா யகியாய், வசைபிற ருரையா தியாவையு மெனக்கு மகிழ்ந்தளித் தன்புட னுள்வாய், நசையிலாத் திருநாவுக் கரசிற்கு நகுமிலச் சினையளித் தவனே, திசைபுகழ் திருத்தூங் கானைமாடத் துச் செல்வமே கருணைவா ரிதியே. (216)

திருக்கூடலையாற்றூர்.

கூடலையாற்றூர்ப் புரிகுழ லாட்சேர் கூர்நெறி காட்டுநா யகனே, வீடருள்பவனே நாவலூ ரார்முன் வேதியர்போ லுருவெடுத்து, நாடரும் பெரிய கூடலையாற்றூர் கணுகிவந் தேகுதி யென்ற, தேடரும் பொருளே யெனக் கருள்புரிவாய் செல்வமே கருணைவா ரிதியே. (217)

திருஎருக்கத்தம்புலியூர்.

அளவிலா நாகராசனேத் தெடுத்த வையனே யப்பனே யமுதே, தள்வெனு முறுவ நீ லாயதாக்ஷியவே தாணுவே நீலகண்டேசா, களவுவீண் செய்கை கொலைத்தொழிலுள்ள கசடனேன் சம்புவே யாள்வாய், தெளிபுனற் சடையா யெருக்கத்தம் புலியூர் செல்வமே கருணைவாரிதியே. (218)

திருத்தினைநகர்.

உனைநினைந் துருகா வுள்ளனே னெனினு மொப்பிலா நாயகி தலைவா, மனையுநன் னிலமு மக்களு மாடு மற்றுள பொருள்களு முதவி, சினையமர் கருவா சனையுநீ யொழித்தாள் சிற்பரா நற்றிருந் தீசா, தினையமுதுண்டு தினைநக ருறையுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (219)

திருச்சோபுரம்.

சோபுரத் தமருஞ் சோபுர நாதா சோபுர நாயகி தலைவா, கோபமுங் கொலையுமுள்ளனே னெனினுங் குறைகழ லிணை யடி யருள்வாய், மாபரம் பொருளாய் விளங்கிடு மணியே மருவிய குறுமுனி வணங்குந், தீபநற்சுடரோ தெளிந்திடுந் தேனே செல்வமே கருணைவா ரிதியே. (220)

## திருவதிகை.

அதிகைவா ழதிகைவீ ரட்டாநா தேசாவப்பரின் சூலைதீர்த் தவனே, நதியணி முடியாய் திரிபுரசுந் தரிசேர் நண்பனே யெனக்கு நீ யருள்வாய், மதியம் வெண்டலையு மரவையும் பூண்ட மன்னனே மாசிலாப் பொருளே, திதிதனை மகிழ்ந்து மாயனுக் கருளுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (221)

## திருநாவலூர்.

சுந்தரர் பிறந்த நாவலூர் வாழுஞ் சுந்தராம் பிகையிடப் பாகா, அந்தகன் றன்னை யுதைத்திடு மமுதே யப்பனே நாவலேச் சுரனே, தந்தியை யுரித்த தாணுவே சிவனே தவித் திடா தெளியனேற் கருள்வாய், சிந்தனை மகிழ்ந்து சுக்கிரன் வணங்குஞ் செல்வமே கருணைவா ரிதியே. (222)

## (திருமுதுகுன்றம்)

இகழ்தொழி லுடையே னுயர்தொழி லறியே னிசையுட னுனைத்துதித் தறியேன், நிகழுல கீன்ற பெரியநா யகிசேர் நித்தனே யெனக்கருள் புரிவாய், புகழும்வன் றொண்டர் தம க்கரும் பொன்னைப்பூரண மாயளித் தவனே, திகழ்பழ மலை வாழ் பழமலை நாதா செல்வமே கருணைவா ரிதியே. (223)

## (திருநெல்வெண்ணை)

மருமலர் வனையேன் மஞ்சன மாட்டேன் மணமிகுந் தூப நற் றீபம், இருகரத் தாலுஞ் செய்தறி யாத யேழையே னையனே யருள்வாய், அரியனே நீல மலர்க்கண்ணி கொஞ்சு மப்பனே வெண்ணெயப் பேசே, திருநெல்வெண் ணையனே நால்வருக்கருளுஞ் செல்வமே கருணைவா ரிதியே. (224)

(திருக்கோவலூர்)

அந்தகா சூரன் றனைவதை புரிந்தோ யட்டவீ ரட்டத்தி லொன்றாய், வந்தனை புரியுந்த லமெனுங் கோவலூருறை வள்ளலே வாழ்வே, புந்திபி னினையே னெனினுநீ யாள்வாய் புண்ணியா வீரட்ட நாதா, செந்திவர் வாய்நற் சிவானந்த வல்லி செல்வமே கருணைவா ரிதியே (225)

(திருஅறையணிநல்லூர்)

அறையணி நல்லூ ரறையணி நாதா வருளரு ணாயகி தலை வா, கறையணி களத்தாய் முகிலணி சடையாய் காணரும் பிரசண்டர் மகிழ்ந்தே, நிறையணி மலரா லருச்சனை புரியு நித்தனே முத்தனே யாள்வாய், சிறையளி பாடுங் கொன்றை யஞ் சடையாய் செல்வமே கருணைவா ரிதியே (226)

(திருஇடையாறு)

சிரந்தனிற் கங்கை யணிந்தசெஞ் சடையாய் சிற்றிடை நாயகி தலைவா, அரும்பொனே சிவனே சுகர்முனம் வணங்க வமரிடை யாற்றுநா தேசா, திரும்பினு மெளியேன் வலியவ னல்லேன் றொல்வினைத் தொடர்பறுத் தருள்வாய், திருவி டை யாற்றி னமர்பரம் பொருளே செல்வமே கருணைவா ரிதியே. (227)

(திருவெண்ணைநல்லூர்)

தாணுவே தடுத்தாட் கொண்டநா தேசா தனிப்பெரு வேற்கண்ணி தலைவா, பேணுறுநாவ லூரர்தன் மணத்திற் பெரும்புக ழோலைகாண் பித்து, நீணிலம் புகழ்ந்து பேசிடத் தடுத்தாட் கொண்டவா நீயெனக் கருள்வாய், சேணுறு மிாட மர்வெண்ணைநல்லூர்ச்செல்வமேகருணைவாரிதியே. (228)

(திருததுறையூர்)

சுந்தரர் தமக்குத் திருவடிசூட்டுஞ் சோதியே சுகானந்த வாழ்வே, அந்தமாந்துறையூர்ப் பசுபதீச்சுரனே யையபூங் கோதைநாயகியைச், சொந்தமாயிடத்தி லமைத்திடு மழுதே சொல்லரும் பொருளெனக் கருள்வாய், சிந்தனை கடந்த சிவ பெருமானே செல்வமே கருணைவாரிதியே. (229)

திருவடுவூர்.

வடுவகிற்கண்ணி பங்கனே வடுவூர்வாழ் வடுகேச்சுரநாதா, கடுவிடமுண்ட காளகண்டேசா கருதரும் வடுகன்முன் வண ங்கும், படர்சடைப் பரமா பஞ்சினுமெளியேன் பருவா லொழித்தெனக் கருள்வாய், திடமுறு விடப்பாம் பணிந்திடு மழகா செல்வமே கருணைவாரிதியே. (230)

திருமாணிக்குழி.

பத்தராய் வாமனன்றொழும் பொருளே பகரரு மெளிய னுக் கருள்வாய், அத்தனே சையோகத்தல மமரு மையனே மாணிக்கவரதா, பித்தனே மாணிக் குழியில் வாழரசே பிறங் கிடு மாணிக்கவல்லி, தித்தித்த வசனங் கேட்டுள மகிழுஞ் செல்வமே கருணைவாரிதியே. (231)

திருப்பாதிரிப்புலியூர்.

மங்கையர் குரவைப் பாட்டொலி யுவரி வாயடைத்திடு மறு குடுத்த, பொங்குசீர்த் திருப்பாதிரிப் புலியூர்வாழ் பொரு விலாத் தோகையம் பிகைசேர், துங்கனே தோன்றுத் துணை வனே யருள்வாய் தொல்புலிக் கான்முனி தொழுவோய், திங்கள்வாழ் சடையாய் மால்விடை யுடையாய் செல்வமே கருணைவாரிதியே. (232)

திருமுண்டீச்சுரம்.

புரிமுறுக் கவிழுங் கொன்றையஞ் சடையாய் புரந்தரன் புகழுமுண்டீசா, கருதருங்கானார் குழலியை மணந்த கடவுளே கடையனேற் கருள்வாய், பொருவிடைக் கொடியாயொரு மடக்கொடியை புரிசடை முடியணிபுனிதா, திருவளர் முண்டீச்சுரத்துறை தேவா செல்வமே கருணைவா ரிதியே. (233)

திருப்புரவார்பனங்காட்டூர்.

இபமுரித்தவனே வெந்தையே பனங்காட் டீசனே யென்னிரு கண்ணே, அபயமே யடியாற் கருள்செயு மரனே யரும்புறவாம்பிகை தலைவா, உபயநின்பாத மெனக்கருள் புரிவாயுயர் புறவார்பனங் காட்டாய், சிபியரசனுக்குத் தெரிசனங் கொடுத்த செல்வமே கருணைவாரிதியே. (234)

திருவாமாத்தூர்.

அப்பனே காமார்த் தேசசுரப்பொருளே யழகிய நாயகி யணைந்த, தப்பிலா வாமாத்தூர் வளர் விளக்கே தனிப்பெரும் பசுக்கள் பூசித்த, துப்பெனுஞ் சடையாய் தூயனே யமுதே சுகமடி யேற்குற வருள்வாய், செப்பருந்திருநீ றணிந்த மேனியனே செல்வமே கருணைவா ரிதியே. (235)

திருவண்ணாமலை.

காண்மகிதலத்தி லனைத்துயிர்க் கனையாய்க் காக்குமுண்ணா முலை யுமையாள், தோண் மருவருணாச லப்பரஞ்சுடரோ தொண்டனே னினைத்தவை யருள்வாய், நீண்முகி னிறத்தோரானான்முகன் மேனாள் நேடிவாடிட வழற்பிழம்பாய்ச், சேணிசை யுயரண் ணாமலை யமர்ந்த செல்வமே கருணைவாரிதியே.

நடுநாடு முற்றும்.

காமகோடிபீடம், காஞ்சிபுரம்.

கம்பையின் கரையி லரியமா தவத்தைக் கடிதினி லியற்று காமாக்ஷி, வம்பிணைப்பகைத்த விளமுலைக் குடைந்த வல்லவா காஞ்சிமா நகர்வாழ், தும்பை வேணியனே யெனக்கருள் புரி வாய் துணைவனே யென்னுயிர்த் தலைவா, செம்பொன் மேனி யவே காம்பரநாதா செல்வமே கருணைவா ரிதியே. (237)

திருக்கச்சிமேற்றளி.

கச்சிமேற்றளிவாழ் மேற்றளிநாதா கன்னிகா மாக்ஷிதன் கணவா, நச்சணி மிடற்றாய் முத்தலைவேலு நவியமும் பொறு த்த செங்கரனே, சச்சிதா நந்தா மாயனுக் கிரங்கிச் சகந்தொழ வருள் புரிந் தவனே, செச்சையை யணிந்தோ யென்னை யாண்டருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (238)

திருவோணகாந்தன்றளி,

ஓணகாந்தீசா வொழிவிலாப் பொருளே யோணகாந் தன் றளி யமர்ந்த, காணருமரனே கருதுங் காமாக்ஷி காந்தனே கற் பகக் கனியே, வேணியா நிதிவன் றெண்டருக் களித்த விம லனே வேண்டுவ வருள்வாய், சேணுளோர் புகழுஞ் செங்க ரும்பே யென் செல்வமே கருணைவாரிதியே. (239)

திருக்கச்சியனேகதங்காவதம்.

அரும்பொனே யனேகதங் காவதநாதா வையகா மாக்ஷி யம் மையினை, ஒருபுறத் தமைத்த வொளிவளர் விளக்கே யுல கினுக் கொருபரஞ்சுடரோ, கரும்பின் முக்கனியே கண்டுதே னமுதே கணபதி வணங்கிடு முதலே, திருவள ரனேக தங்கா வதமேய செல்வமே கருணைவா ரிதியே. (240)

### திருகச்சிநெறிக்காடு.

பெரும்புகழ்க்கச்சி நெறிக்காரைக்காடா பெரிய காரைத் திருநாதா, மருமலர்க்குழற் காமாக்ஷி யம்மையினை மருவிய மரகதமணியே, அரிய விந்திரனுக் கனுக்கிரகித்த அய்யனே யெனக்கருள் புரிவாய், திருமகள் கொழுநன் தேடரும் பொருளே செல்வமே கருணைவா ரிதியே. (241)

### குரங்கணின்முட்டம்.

குரங்கணில் காகந் தொழுத மெய்ப்பொருளே குரங்கணின் முட்டத்தில் வாழ்வே, இரங்கியின் னருளை யடியனேற் கருள்வா யிறைவளை நாயகிதனை நீ, மருங்கினி லமைத்த மாசிலா மணியே மன்னுவா லீச்சுரப் பொருளே, சிரந்தனிற் கொன்றை சூவிளமணிந்த செல்வமே கருணைவா ரிதியே. ()

### திருமாகறல்.

புத்தினுள் ளிருந்து தோன்றிய பொருளே புகரும் பூந்திடும் புகழே,மத்தகவிழியார்மங்கலங்காத்த வரதனே புவனநாயகியாஞ், சத்தியை யிடத்தி லமைத்த சங்கரனே சம்புவே மரகதமணியே, சித்தமித்தருணம் வைத்தெனக் கருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (243)

### திருஒத்தூர்.

ஆண்பனைபூத்துக் காய்த்திடும் படிநின் னடியவ ரமைத்திடுந் தலமாய்க், காண்படு மோத்தூர் வேதநாயகனே கடவுளே கற்பகக் கனியே, பூண்புனைந் திணைந்த விளமுலை மாதைப் பொருந்திய பராபரப் பொருளே, சேண்புகழமுதே தேவர்க டேவே,செல்வமே கருணைவா ரிதியே. (244)

## திருவன்பார்த்தான்பனங்காட்டூர்.

பெரும்பனம் பழ நைவேத்தியந்தினமும் பெறுங்கரு ணாக ரப்பொருளாய், வரும்பனங்காட்டு நாதனேயமிர்த வல்லியை யொருபுரத் தமைத்தோய், கருதும்வன் றொண்டர் தமக்குள மிரங்கிக் கட்டமு தளித் தொளிந்தவனே, திருவளர் வன்பார் த்தான் பனங்காட்டூர்ச் செல்வமே கருணைவா ரிதியே. (245)

## திருவல்லம்.

வல்லவர் வல்லாம் பிகைவலம் வைத்த வல்லநா தேச்சுர மணியே, சொல்லரும் வல்லா ளரசன் பூசித்த சுயம்புவே யெனக்கருள் புரிவாய், கல்லெனு மனக்கஞ் சாரராக்கதனைக் கடிந்திடுங் கற்பகக் கொழுந்தே, செல்லமர் பொழில்சூழ் வல்லம்வாழ் மணியே செல்வமே கருணைவா ரிதியே (246)

## திருமாற்பேறு.

வீடளிப்பவனே யோடெடுப் பவனே விளங்குநல் லாடெடு ப்பவனே, தோடணிந்தவனே கருணைநாயகியாள் துணை வனே மால்வணங்கேசா, நாடருதிருமாற் பெறெனுந் தலத் தில் நண்ணிய முக்கணாயகனே, தேடருமாற்கு த்திருவருள் புரிந்த செல்வமே கருணைவா ரிதியே. (247)

## திருவூறல்.

ஊறலிலுமையை யொருபுறத் தமைத்தவுமாபதி நாதனே திருவெண், நீறணிபவனே நந்தியின் வாயினின்றுதித் திடுங் கங்கை மிக்க, ஆறெனப் பெருகி வலம்வந்து திசத்தினடிமி

சைத் தோன்றி யக்குளமும், தேறிய வயலும் சிறப்புறுந் தலம் வாழ் செல்வமே கருணைவா ரிதியே. (248)

## திருஇலம்பயங்கோட்டூர்.

இலம்பயங் கோட்டூர் வாழ்ந்திடு மரனே யிணைந்தகோடே ந்து மாமுலையாள்,வலந்திக ழரனே சந்திரசே கரனே வள் ளலே யரம்பையர் வாழ்த்தி, நலந்தரு பூசை புரிந்திட வவர் க்கு நல்வர மளித்த நாயகனே, சிலம்பணி பதனே யெனக் கருள் புரிவாய் செல்வமே கருணைவா ரிதியே. (249)

## திருவிற்கோலம்.

காரணி சடையாய் திரிபுராந் தகனே கருதருந் திரிபுராந் தகியாய், பேரமர் திரிபுர தகனஞ்செய் ததின்பின் பிறங்கு நற் றேவர்பூ சித்த, கூரமர் மழுவை வலமுட னமைத்த குரி சிலே யெனக்கருள் புரிவாய், சீரணி விற்கோ லந்தனி லம ருஞ் செல்வமே கருணைவா ரிதியே. (250)

## திருவாலங்காடு.

சாலங்கள் பலவுங் கோலங்களெனவே சாதித்துப் போதி த்துத் திரியுங், கீலங்கொள் மனத்தே னலங்கேட் டிருந் துங் கிட்டிவந் தருளலை யருள்வாய், ஆலங்கா டுறையு மூர் த்துவ தாண்டவனே யருட்குடி கொண்டமெய்ஞ் ஞானச் சீலங்கொள் வண்டார் குழலியைப் பிரியாச் செல்வமே கருணைவாரிதியே. (251)

## திருப்பாசூர்.

மாங்குயி லஞ்சொற் பசுபதி யம்மை மணந்திடு மாசிலா மணியே' நீங்கரும் பாசூர் நாதனே சோழ னினைவணங் கிட வவற் கருளும், பாங்கமர் பரனே யேழையேற் கிரங்கிப் பாதபங் கயமென்க் கருள்வாய், தேங்கிய புகழா லோங்கு பாசூர்வாழ் செல்வமே கருணைவா ரிதியே. (252)

## திருவெண்பாக்கம்.

நாவலூ ரார்க்குக் கோல்கொடுத் தவனே நல்லவெண் பாக்கத்தி லமரும், சிவனே கனிவாய் மொழியம்மை மணந்த சிறந்த வெண்பாக்கநா தேசா, ஆவினந்தினையா டும்பெருமரசே யப்பனே யடியனேற் கருள்வாய், தேவர்தந் தேவே சிவபெரு மானே செல்வமே கருணைவா ரிதியே. (253)

## திருக்கள்ளில்.

அண்ணலே யமுதே சிவாநந்த நாதா வானந்த வல்லியை மணந்தோய், புண்ணிய ரான பிருகுமுனி வணங்கிப் பூசனை புரிந்திடுங் கருத்தே, தண்ணிய செந்தா மரைமக ளுறைந்து தங்கிய திருக்கள்ளில் வாழ்வே, திண்ணியபெலனை யெனக் கருள் புரிவாய் செல்வமே கருணைவா ரிதியே. (254)

## திருக்காளத்தி.

தேயத்தே புகழச் சிலந்தியு மரவுந் திறமுள யானையுந் தொழுவோய், தீயத்தான் றலைப்பட் டேனே முன்வினையைத் தெரிகிலேன் றீர்த்தருள் புரிவாய், நேயத்தான் மிகுசீர் ஞானப்பூங் கோதை நிலவியே காளத்தி வாழ்வே, சீயத்தோ லுடைய காளத்தீச் சுரனே செல்வமே கருணைவா ரிதியே. (255)

## திருஒற்றியூர்.

கறுத்திடுங் களத்தாய் சுந்தரர்க் குவந்து கவினமர் சங்கிலி யாரைப், புறத்தினி னமைத்து மணமுடித்தவனே புனிதனே யொற்றியூரரசே, நிறத்திநாற் பசிய வடிவுடை யம்மை நேயனே மாணிக்கத் தியாகா, திறத்தடைந்திடவே யடியனுக் கருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (256)

## திருவலிதாயம்.

உருவினிற் சிறந்த தாயம்மை மணந்த வுத்தமா வனுமனுக் கருள்வோய், பருவர லுடையேன் படுதுய ரறிந்தும் பராமுக

மாயிருந் திடுதல், அருளுடையோனே யஃதுனக் கழகோ, வையயோ வஃதொழித் தருள்வாய், திருவலிதாயா வலிதாய நாதா செல்வமே கருணைவா ரிதியே. (257)

திருவடமுல்லைவாயில்.

சுப்பிர மணியர் பூசனைபுரிந்த சொல்லரும் பாசுபதேசா தப்பருமாதொண் டைச்சக்கர வர்த்தி தாங்கரும் வெட்டுடன் றேன்றும், அப்பனே யரனே கொடியிடை யானை யனுதின முடையவம்மானே, செப்பரும் வளஞ்சூழ் வடமுல்லைவாயிற் செல்வமே கருணைவா ரிதியே. (258)

திருவேற்காடு.

குறுமுனிக் கிரங்கி திருமணக்கோல தரிசனங் கொடுத்த வேற்காடா, மறுவணி மார்பத் துடையமா றனுக்கு மருவிய தங்கையை மணந்த, அறுகணி யமலா வேற்கணிபாகா வைய வேற் காட்டுநாதேசா, சிறியவர றியாப் பெருமையை யருள்நீ செல்வமே கருணைவா ரிதியே. (259)

திருமயிலாப்பூர்.

திருவளர் காழிப் பிள்ளையார் பாடத் திகழெலும்பு பெண் ணென வளித்தோய், முருந்துரழ் மூரற் செய்யவாய்ப் பணை த்தோள் முகிழ்நகைக் கற்பகவல்லி, வருந்திடாதளித்த பாக னே யமுதே வள்ளலே நற்கபா லீசா, திருந்தவே யழிவின் முத்திவீடருள்வாய் செல்வமே கருணைவா ரிதியே. (260)

திருவான்மியூர்.

வான்மீக ரிஷிக்கு நடனங்காண்பித்து வான்மியூர் வாழ்ந்தி டும் வாழ்வே, மான்மறிக் கரத்தாய் சுந்தரநா யகியை மருவிய பால்வண்ண நாதா, ஆனையினுரியு மரும்புலித்தோலு மணிந் திடு மப்பனே யருள்வாய், தேன்மண நிறைந்த மலர்த்தொ டை முடியாய் செல்வமே கருணைவா ரிதியே. (261)

திருக்கச்சூராலக்கோயில்.

மருவுவன் றொண்டர்க் கமுதளித்தவனே மன்னிய வுமை

யம்மை மணந்த, விருந்திட்ட வரதா வேதத்தின் முடிவில் விளங்குறும் திருவடி யுடையாய், பெருமையும் புகழுமக்களும் பொருளும் பெற்றுவாழ்ந்திடவெனக் கருள்வாய், திருக்கச்சூ ராலக் கோவிலில் வாழுஞ் செல்வமே கருணைவா ரிதியே. ()

## திருஇடைச்சுரம்.

இடைச்சுரம் வாழிமை யாம்பிகை நாதா விடைச்சுர நாத னேயருள்வாய், விடைக்கொடியுயர்த்தும் வலக்கரமுடையா ய் விளங்கிய சூலபாணியனே, சடைமுடிச் சனற்கு மாரர்வந் திறைஞ்சுஞ் சம்புவே சதாசிவப்பொருளே, திடவிடவரவைத் தலைதனிலுடையாய் செல்வமே கருணைவா ரிதியே. (263)

## திருக்கழுக்குன்றம்.

வெண்ணையே கமழும்பவளவா யண்ணல் வேதநாறிய திரு வாயான், எண்ணினுக்கடங்கா கழுக்குன்றநாதா வினையிலாப் பெண்ணினல் லாள்சேர், அண்ணலே வேதகிரீச்சுர வருள் வாய் யார்துணை நீயெனக்கல்லால், தெண்ணிலாச் சடையா ய்க் கழுகு பூசித்த செல்வமே கருணைவா ரிதியே. (264)

## திருஅச்சிறுபாக்கம்.

புரந்தனை யெரிக்க ரதந்தனிலேறும் பொழுதினி லச்சிறுஞ் செயலால், அரியவத் தலத்திற் கச்சிறுபாக்க மெனும்பெய ரமைத்ததி லமரும், கரந்தனின் மழுவாய் பாகபுரேசாக் கருத ருஞ் சுந்தர நாயகியாய், சிரந்தனிற் கங்கை யணிந்தசெஞ் சடையாய் செல்வமே கருணைவா ரிதியே. (265)

## திருவக்கரை.

வக்கிரா சூரன் பூசனைபுரிந்த வக்கரையெனும் பெருந்தலத் தாய், அக்கணிபவனே சந்திரசேகரனே யருள்வடிவாம்பிகை தலைவா, கொக்கிறகணிந்த குரிசிலே யெனக்குன் குஞ்சித பதந்தனை யருள்வாய், திக்கணி பவனே முக்கணு சிவனே செல்வமே கருணைவா ரிதியே. (266)

## திருஅரசிலி.

அரசிலிவாழு மரசிலி நாதா வரியவோர் முனிதொழு பவனே, குரைகட லமுதே பெரியநா யகியைக் கொண்டநற் குணாகரப் பொருளே, நரைவிடை யூருநாதனே நமனை நடுங் கிடும் படியுதைத் தவனே, திருமிடற தனில் விடந்தனை யணி ந்த செல்வமே கருணைவா ரிதியே. (267)

## திரு இரும்பைமாகாளம்.

இரும்பைமா காள நிறைந்த மாகாள நாதனே யெண் குண விறைவா, அருந்தரு மருந்தே குயின்மொழி யம்மை யருகினி லமைத்த மெய்ச்சுடரே, மருவிய மாகாளன்மிக வணங்கும் மாசிலாப் பேரருளே யாள், திருந்திய தேனே தேனினின் சுவையே செல்வமே கருணைவா ரிதியே. (268)

தொண்டைநாடு. முற்றும்.

## துளுவநாடு. திருக்கோகர்ணம்.

அருமிலங் கையிற்கோன் கொணர்சிவ லிங்கமதைக்கண பதிகரம் வாங்கி, இருநிலத் தமைக்க விராவணன் வணங்கு மீசனே மா பலநாதா, கரும்புறு சொற்கோ கரணநா யகிசேர் காதலா கோகர ணத்தோய், திருவடி நிழலை யெனக்குநீ யருள் வாய் செல்வமே கருணைவா ரிதியே. (269)

துளுவநாடு முற்றும்.

## வடநாடு. திருப்பருப்பதம்.

நெருப்புமிழ் சூலப் படைக்கர முடையாய் நித்தனே முத் தனே நிமலா, விருப்புட னந்தி கேச்சுரர் வணங்கும் விம லனே வில்லடி யுடையோய், பருப்பத நாதா நின்பத மளிப் பாய் பருப்பத நாயகி தலைவா, திருப்பருப் பதம்வாழ் சங்கரா சிவனே செல்வமே கருணைவா ரிதியே. (270

## திருஇந்திரநீலப்பருப்பதம்.

இந்திரநீலப் பருப்பதா சிவனே யீசநீ லாசல நாதா, இந்திரன் வணங்கு மெம்பெருமானே யிணையில்நீ லாம்பிகை மணந்தோய், தந்திமா முகனைத் தனயனாக் கொண்ட தற்பரா நீயெனக் கருள்வாய், செந்துவர் நிகர்த்த செஞ்சடா டவியாய் செல்வமே கருணைவா ரிதியே. (271)

## திருவனேகதங்காவதம்.

அப்பனே யருண்மன் னேச்சுரா சிவனே யனேகதங் காவதத் தமர்வோய், கொப்பினை யணிந்த மனோன் மணிநாதா கோதறுஞ் சூரியன் பரவும், துப்பெனும் வேணி யுடையமாமணியே துணையிலிக் குன்பத மளிப்பாய், செப்பருஞ் சிவயோ கப்பரஞ் சுடரே செல்வமே கருணைவா ரிதியே. (272)

## திருக்கேதாரம்.

வாசவ னமரராறு மாதமும் வார் மானிட ராறுமாதமு நின், மாசிலா மலர்த்தா ளிறைஞ்சிட வமர்ந்தோய் மறுவில்கே தாரநா தேசா, நேசகே தாரகௌரியைமணந்த நித்தனே நீமகிழ்ந் தருள்வாய், தேசுலாந் திருக்கே தாரமா நகர்வாழ் செல்வமே கருணைவா ரிதியே. (273)

## திருநொடித்தான்மலை—கைலாசம்.

மூவருங் கருதிப் பாவனை புரிய முடிவில்வே தங்களைத் தேடுக்க, யாவர்க்கு மரிய நாகியன் பருக்கே யெளியனுய்க் கைலையி லமர்ந்தோய், தாவிலாப் பரம சிவனே மெய்யன்பே தாழ்குழற் பார்வதி தலைவா, தீவினை துடைத்தா ளழிவில்வீ டளித்துச் செல்வமே கருணைவா ரிதியே. (274)

சிவாலயமான்மியக்கோவை

முற்றிற்று.